    

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவர முநயே நம:
ஸ்ரீமத் வாநாசல முநயே நம:

# ககநகிரிமுநி குருபரம்பரா ப்ரபாவம்

[ஸ்ரீ வானமாமலை மடத்துப பீடாதிபதிகளாகிய ஸ்வாமிகளுடைய வைபவம]

பண்டிதரத்னம் திருக்கண்ணபுரம்
சௌ. ஸ்ரீநிவாஸாசார்யாரால் (சிரோமணி)
பரிசோதிக்கப்பட்டது

ஸ்ரீ வானமாமலை மடம் 27-வது பட்டம்
ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான
சின்ன ராமாநுஜ ஸ்வாமியின் நியமனத்தால்
வெளியிடப்பட்டது

மதராஸ்

துர்முகி வருஷம் சித்திரை மாதம்

விலை ரூ. 1-12-0



முதலாவது வானமாமலை ஸ்வாமி



27-வது பட்டம் ஸ்ரீ சின்ன ராமானுஜ ஸ்வாமி

# முகவுரை

## ககநகிரிமுநி குருபரம்பரா ப்ரபாவம்

பின்பழகராம் பெருமாள் ஜீயர் அருளிச்செய்த குருபரம்பரா ப்ரபாவம், ஆழ்வார்கள் வைபவம் தொடங்கி உடையவர் வைபவத்தைப் பரக்கக் கூறி நம்பிள்ளை வரையிலுள்ள ஆசார்யர்களின் வைபவங்களைக் கூறிற்று. பிள்ளைலோகம் ஜீயர் அருளிச் செய்த யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம், நம்பிள்ளையின் சிஷ்யர்களான வடக்குத் திருவீதிப் பிள்ளை, பெரிய ஆச்சான்பிள்ளை தொடங்கி ஆசார்யர்களின் வைபவங்களைப் பேசி வந்து யதிவர புநரவதாரமான மணவாள மாமுனிகளின் வைபவங்களைப் பரக்க நிரூபித்தது. அந்த மணவாள மாமுனிகளின் அஷ்டதிக் கஜங்களில் ப்ரதமத்தில் எடுக்கப்பட்டு அவர் ப்ரதம சிஷ்யராய், அவரது பாதரேகாஸமராய், "பொன்னடிக் கால் ஜீயர்" எனப் போற்றப் பெற்று, அவரால் வானமாமலை பீடத்தில் தமக்கு ப்ரதிநிதியாய் ஸ்தாபிக்கப் பெற்று, தர்சனத்தைத் தழைத்தோங்கும்படி ப்ரவர்த்தனம் செய்ய நியமிக்கப் பெற்றவர் வானமாமலை முதலாவது (ஸ்ரீனருன) ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஆவார். அந்த ஸ்வாமி தொடங்கி அந்தப் பீடத்தை அலங்கரித்து எழுந்தருளியிருந்த ஸ்வாமிகளின் வைபவங்களைக் கூறுகின்றது இந்த க்ரந்தம். முதலாவது ஸ்வாமியின் அவதாரம், மாமுனிகளை ஆச்ரயித்தது முதல் நித்ய விபூதிக்கு எழுந்

தருளியது ஈருகவுள்ள அவரது வைபவஙகள, இவறறை "ஸ்ரீவரமஙகை முனி வைபவம்" விஸதாரமாகக கூறிறறு. எனவே இநத கரநதம, அவரது சரிததிர வைபவததில நோககினறி அவா அவதார மெனபதையும அவரது ஆசாாயத்வததையும "மணவாள மாமுனிவன பொன னடியாம செஙகமலப போதுகள" அவரே எனபதையும முதலில பரமாணஙகளுடன நனகு நிரூபணம செயதது, இநத பரஸஙகததில முதலில மாமுனிகளின சரிததி ரததைச சுருககிக கூறி அவரது வாழித திருநாமஙகள பலவறறையும வெளியிட்டிருககிறது. பினபு முதலாவது வானமாமலை ராமானுஜ ஜீயா ஸவாமி தொடஙகி வானமாமலை ஆசாாய பீடததில நியமிககபபட்டுப பரம பரையாய எழுநதருளியிருநத ஸவாமிகளின வைபவஙகள எலலாவறறையும இநத கரநதம கூறுகினறது எனவே இது "ககநகிரிமுநி குருபரமபரா பரபாவம" எனப பெயா பெறறது. இதில முககியமாகக கூறபபடும விஷயஙகளா வன அநதப பீடததில எழுநதருளியிருநத ஸவாமிகளின அவதார தினஙகள, திருநக்ஷதரத தனியனகள, வைபவத தனியனகள, வாழித திருநாமஙகள, சீாகள, அநதப பீடத தில அவாகள அமாநத காலம, மொததம எழுநதருளி யிருநத ஸமவதஸரஙகள, வானமாமலையிலும மறறுமுள்ள திவய தேசஙகளிலும, அவாகள செயதருளிய கைஙகாயங கள, திகவிஜய யாததிரைகள, திவய தேசஙகளின மஙகளா சாஸநஙகள, மடததுககுச் சேமிதது வைதத நிதிகள, முதலியனவாகும. இதில, 26-வது படடததை அலங கரித்த ஸ்ரீமதுரகவி ராமானுஜ ஸவாமி ஈருகவுள்ள

ஸ்வாமிகளின் வைபவங்களைக் காணலாம். 27-வது பட்டத்தை அலங்கரித்துத் தற்பொழுது எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீசின்ன ராமானுஜ ஜீயர் ஸ்வாமி செய்தருளிய கைங்கர்யங்கள் ஆழ்வார் திருநகரித் திருத்தேர் கைங்கர்யம், உள்ளூரில் விமான ப்ரதிஷ்டை முதலியனவாகும்.

இத்தகைய க்ரந்தம் ஆசார்யர்களின் சரிதமென்பது மாத்திரமின்றி சரித்திர முக்யத்வமும் வாய்ந்ததுமாகும். இது நீண்ட காலம் நமது விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாய விஷயத்தில் இந்த மடம் ஆதிமுதல் ஆற்றி வந்துள்ள பணிகளை நன்கு அறிவுறுத்தவல்லதுமாகும். தற்காலத்திய பாமர ஜனங்களின் மனதில் இத்தகைய தொண்டுகளைத் தூண்டுவதற்கும் இது ஏதுவாகலாம். எனவே இதன் முக்யத் தன்மையை உணர்ந்தே வர்த்தமான ஸ்வாமி 27-வது பட்டம் சின்ன ராமானுஜ ஜீயர் ஸ்வாமி நியமனத்தால் மடத்தின் ஆதரவிலேயே இந்த க்ரந்தம் அச்சிட்டு வெளியிடப்பட்டது. பழைய நாட்களில் அந்தந்த ஸ்வாமிகள் எழுந்தருளியிருந்த காலத்தில் நிகழ்ந்த வைபவங்கள் பெரியோர்களால் தொகுத்து எழுதப்பட்டு மடத்துப் புஸ்தக சாலையில் இருந்தன. அச்சு வசதி ஏற்பட்ட பின் சில ஸ்வாமிகளின் வைபவங்கள் மாஸ ஸஞ்சிகைகளிலும் வெளிவந்திருந்தன. அவைகளில் வெகு நீளமாக எழுதியிருந்த வாக்யங்களைப் பிரித்துப் பல வாக்யங்களாக்கியும், அதிக ஸம்ஸ்க்ருத பதங்களை அகற்றியும், பாமர வழக்குச்சொற்கள் கலந்திருந்தவற்றை நீக்கியும் வீணவளர்த்தல் இன்றிச் சுருக்கியும், கூடுமான வரையில் பிழைகளைப் போக்கியும் இந்த நூல் தொகுத்து

வெளியிடப்பட்டிருக்கிறது. இதற்கு முன் வெளியிட்டுள்ள "ஸ்ரீவரமங்கை முனி வைபவம்", அடியேனது தமிழ் உரையுடன் வெளியிடப்பட்ட ப்ரபத்தி மங்களாசாஸந க்ரந்தங்கள் இவை பெரியோர்களது பாராட்டைப் பெற்றுள்ளன. ஸ்ரீஸ்வாமியின் கருணை கடாக்ஷத்தினுல் இந்த க்ரந்தத்தையும் அச்சிடும்படியான இச்சிறு தொண்டு நியமிக்கப் பெற்றுப் பூர்த்தியையும் பெற்றுள்ளது.

இந்த மூன்று க்ரந்தங்களும் நமது வானமாமலை மடத்து ஸம்ப்ரதாயத்தில் ஈடுபாடுள்ள சிஷ்யகோஷ்டிகளுக்கு இன்றியமையாதவையாகும். ஆகையால் இவைகளை வாங்கிப் படித்து ஆசார்ய சரிதங்களை உணர்ந்து அவ்வழி யொழுகி நன்னெறி பெறுமாறு வேண்டுகின்றேன்.

ஸ்ரீஸ்வாமியின் ஸ்ரீபாததூளி
பண்டித ரத்னம் திருக்கண்ணபுரம்
**சௌ. ஸ்ரீநிவாஸ தாஸன்,**
திருவல்லிக்கேணி.

# பொருளடக்கம்

(வைபவ விவரஙகள)

---

---



ஸ்ரீ வரமங்காஸமேத தேவநாயக ஸ்வாமிநே நம:||
ஸ்ரீமதே ராமாநுஜார்ய நம :||
ஸ்ரீமத வர வரமுநயே நம :||
ஸ்ரீமத வாநாசல முநயே நம :||

# கநகிரிமுநி குருபரம்பரா ப்ரபாவம்

1 ஸ்ரீ சைலேச தயாபாதரம் தீபக்த்யாதிகுணாணவம் |
யதீந்தரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ||
ரம்யஜாமாத்ரு யோகீந்தர பாதரேகாமயம் ஸதா ||
ததாயததாத்மஸத்தாதிம் ராமாநுஜமுநிம் பஜே ||

இந்த க்ரந்தம், அழகிய மணவாள மாமுனிகள தொடங்கி அவா திருவடிகளில் ஆச்ரயித்து அவர் பாத ரேகாமயராய, வைராக்யாதி கல்யாண குணபூஷிதரான,

---

1 श्रीशैलेशदयापात्रं धीभक्त्यादि-गुणार्णवम् ।
यतीन्द्रप्रवणं वन्दे रम्यजामातरम्मुनिम् ॥
रम्यजामातृयोगीन्द्र-पादरेखामयं सदा
तदायत्तात्मसत्तादिं रामानुजमुनिं भजे ॥

பெரிய வானமாமலை ராமானுஜ ஜீயர் ஸ்வாமி, அவரால் நியமிக்கப்பட்டுப் பரம்பரையாக அநத ஆஸ்தானத்தை அலங்கரித்தவர்களான மற்றய .ஜீயர் ஸ்வாமிகள்—இவர் களின் வைபவங்களுக்கு பரகாசகமுமாய், அவர்கள் வாழித் திருநாமங்கள், சீர், நாள் பாட்டுகள், அவதார தினங்கள் இவற்றுக்கு ப்ரகாசகமாய தனியன்களை, நிதயத் தனியன் கள், தீர்தத தின ச்லோகங்களை, மற்றும் கோயில் முதலிய திவய தேசங்களில் இவர்கள செயதருளிய அந்தநதக் கைஙகர்ய விசேஷங்களை, முதலியவற்றை நனகுய ப்ரதி பாதிபபதாகும்.

**1 அழகிய மணவாள மாமுனிகள** —இவர், ப்ரபத்தி மார்ககம் ஸஙகுசிதமாக நடந்து செல்வது கண்டு, ஜகத் ரக்ஷண சிநதாயுக்தரான பெரிய பெருமாளை, லோகமெல் லாம் உஜ்ஜீவிக்கும் விரகு சிநதித்து, தமது திருவணையான திருவநநதாழ்வானை மறுபடியும் அவதரிக்கும்படி நியோகம் செயய, அவரும் திருநகரியிலே திகழக்கிடந்தான் திருநாவீறு டைய பிரான் தாதரண்ணரையருக்குத் திருக்குமாரராய் அவதரிததார் தேசந் திகழும் திருவாய்மொழிப் பிள்ளை திருவடிகளில ஆச்ரயித்து, ஞாதவ்ய ஸகலார்த்தங்களையும் அறிநது, ஸகல சாஸ்த்ரஜ்ஞராய், எம்பெருமானார் திருவடி களில் பராவணய விசேஷத்தாலே "யதீநத்ரபரவணர்" என்று அழைக்கும்படி யிருப்பாராய், திருவாயமொழி ஈடு முப்பத்தாறுயிரத்தை அநவரதாநு ஸந்தானம பணணி முப்பத்தாறுயிரப் பெருககராய, பெரிய பெருமாள் நியோ கததைப் பெற்று ஸ்ரீரங்கத்தில் நித்ய வாஸம் செயயுமவராய் எழுந்தருளியிருந்தார் ஸ்ரீ ரங்கநாதனும் இவருடைய கால க்ஷேப வைகரியைக் கணடு மிகவுமுகந்து தமது திருமுற்ற மான கருட மண்டபத்திலேயே திருவாய்மொழியை வயாக் யானங்களுடன் அருளிச் செய்யம்படி நியமித்து இப்படி ஒரு வருஷம் நடந்து தாம் தம் தேவிமாருடனா இவருடைய வ்யாக்யான சைலியைக் கேட்டு அதி த்ருப்தராய் சாற்று

முறை தினத்தில் தாம் தமது பரிகரத்துடன் எழுந்தருளி யிருந்து, தாம் மணவாள மாமுனிகளுக்குச் சிஷ்யனுனமை தோற்ற அழகிய மணவாள பட்டரான அர்ச்சக குமாரராய் ஐந்து வயதாகிய ரஙகநாயகன் என்னும் சிறுவனிடம் ஆவே சித்துப் பெரியோர்களின நடுவில் தடுத்தும் நில்லாது, அவன் தன்னறிவின்றியே "ஸ்ரீ சைலேச தயாபாத்ரம்" என்றும் தனியனை ஓதும்படி செயதும், அதை ஸந்நிதிகள் எல்லா விடங்களிலும் ப்ரபந்த ஆதி அந்தங்களில் ஓதும்படி நியமித்ததும், இபபொழுதும் எல்லா ஸந்நிதிகளிலும் அத் தனியன் அநுஸந்திக்கப்பட்டு வரும்படியான இவரது வைபவம் வாசா]மகோசரம். அது யதீந்த்ரப்ரவண ப்ர பாவம், ப்ரபநநாம்ருதம் முதலிய க்ரந்தங்களில் பரக்க அருளிச் செயயப்பட்டிருப்பதைக் காணலாம்.

**இவர் அவதாரத தனியன** —[1] ப்ராதோராவம் கதாயாம் கலியுகசரதி ச்ரததராயே சகாப்தே வர்ஷே ஸாதாரணுக்யே ஸமதிகத துலே வாஸரே தீர்த்தஸங்க்யே॥ வாரே ஜீவே சதுர்த்யாம் ஸமஜநிச திதெள சுக்லபக்ஷே ஸுகர்மா, ப்ராஜந மூலாக்யதாரே யதிபதி ரபரோ ரம்ய ஜாமாத்ரு நாமா ॥

என்கிறபடியே கலிபிறந்து நாலாயிரத்து முந்நூற்று எழுபத்தோரு வருஷத்திற்குப் பின்பு ஸாதாரண வருஷம் ஐப்பசி மாஸம் சுக்ல பக்ஷம் சதுர்த்தி வியாழக்கிழமை கூடிய லோகக்ஷேம மூலமான திருமூலத் திருநக்ஷத்திரத் திலே இவர் அவதரித்தார்.

---

[1] प्राथोरावं गतायां कलियुगशरदि श्रद्धराये शकाब्दे वर्षे-साधारणाख्ये समधिगततुले वासरे तीर्थसङ्ख्ये । वारेजीवे चतुर्थ्यां समजनिच्च तिथौ शुक्लपक्षे सुकर्मा भ्राजन्मूलाख्यतारे यतिपति रपरो रम्यजामातृनामा ॥

**இவரது நிதயத் தனியன்** —ச்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்| யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்ய ஜாமாதரம் முநிம்||

**இவர் சீர்:—**

*வாழி திருவாய மொழிப்பிள்ளை மாதகவால்*
*வாழும்மணவாள மாமுனிவன்—வாழியவன*
*மாறன் திருவாய மொழிப்பொருளை மாநிலத்தோர்*
*தேறும்படி யுரைக்கும் சீர்.*

**வாழித திருநாமஙகள .—**

*செயய தாமரைத் தாளிணை வாழியே*
*சேலை வாழி திருநாபி வாழியே*
*துய்ய மார்பும் புரிநூலும் வாழியே*
*சுநதரத திருததோளிணை வாழியே*
*கையு மேநதிய முக்கோலும் வாழியே*
*கருணை பொங்கிய கண்ணிணை வாழியே*
*பொய்யிலாத மணவாளமாமுனி*
*புநதி வாழி புகழ்வாழி வாழியே.* (1)

*அடியார்கள வாழ அரங்க நகர்வாழ*
*சடகோபன் தண்டமிழ நூல்வாழ—கடல்சூழநத*
*மண்ணுலகம் வாழ மணவாள மாமுனியே*
*இன்னுமொரு நூற்றாண்டிரும்* (2)

*இப்புவியில் அரங்கேசர்க் கீடளித்தான் வாழியே*
*எழில்திருவாய மொழிப்பிள்ளை இணையடியோன் வாழியே*
*ஐப்பசியில் திருமூலத் தவதரித்தான் வாழியே*
*அரவரசப் பெருஞ்சோதி அனநதனென்றும் வாழியே*

எப்புவியும் சீசைல மேத்தவந்தோன் வாழியே
ஏராரும் எதிராச ரெனவுதித்தான் வாழியே
முப்புரிநூல் மணிவடமும் முக்கோல்தரித்தான் வாழியே
மூதறியும் மணவாள மாமுனிவன் வாழியே. (3)

முந்தைமறைத தமிழுரைக்கும் முத்திரைக்கை வாழியே
முந்நூலும் திருமார்பும் முக்கோலும் வாழியே
உந்தியமைத திருவரையும் உடையழகும் வாழியே
ஒருநாளும் மறக்கவொண்ணு ஒளிமுறுவல் வாழியே
சிந்தைதனைக் கொண்டருளும் திருமேனி வாழியே
செங்கருணை குடியிருக்கும் திருநயனம் வாழியே
வந்தருளி எனையெடுத்த மலர்த்தாளகள் வாழியே
மணவாள மாமுனிவன் வாக்கின்பம் வாழியே. (4)

தினைப்பொழுதும் தனைமறவாச சிநதைதந்தோன் வாழியே
சீர்திருவாய மொழிப்பிள்ளை சீருடையோன் வாழியே
நினைப்பவர்கள பிறவிதனை நீக்குமவன் வாழியே
நீள்புவியில் தன்புகழை நிறுத்தினுன் வாழியே
அனைத்தாழவார் கலைப்பொருளை ஆயநதுரைபபோன்
அழகாரு மெதிராசர்க் கனபனூா வாழியே [வாழியே
எனைபபோலும் பாவியர்கட் கிரங்குமவன் வாழியே
என்னப்பன் மணவாள மாமுனிவன் வாழியே. (5)

சீராரும் செங்கமலத் திருவடிகள் வாழியே
திருமருங்கில் துவராடை யுடையழகும் வாழியே
ஏராருந் திருநாமம் இலங்குபுயம் வாழியே
எப்பொழுதும் சங்காழி ஏந்துமவன் வாழியே
கார்போலும் செங்கையுறை முக்கோலும் வாழியே
கருணைகுடி கொண்டருளும் கண்ணிணைகள் வாழியே

வார்காதுந் திருநாம மணிநுதலும் வாழியே
மணவாள மாமுனிவன் மௌலியென்றும் வாழியே.(6)

கருதிவந்த அறுசமய ஈசரொடு கலிகடிந்த செந்திறலும்
வாழியே
கழல்வணங்கி நினைவோர்கள் தீயவினை
களைந்திடுநற் கருணைமிக வாழியே
திருவிளங்கு புரிநூலும் மாசில்லாத திருவரைச்செந
துவராடை வாழியே
சகம்வணங்கு திரிதண்டு மாகியொளி
செம்பொன்சேர் மேனிமிக வாழியே
அருணவொண் கிரணமணி திகழுந்திடுவா
ளரவமளி யதுதனிலே மேவி
அழகமர்ந்து விழிதுயிலு நங்குரி சிலணியரங்கர்
பதமலருள ளார்நத
மருவினிய மனுகொண்ட எதிராச மாமுனியும்
மறையும்
வாழவரு மணவாள மாமுனிவன் ஊழிதொறும்
மிகவாழி வாழியே, (7)

செந்தமிழ வேதியர் சிநதை தெளிந்து சிறநது
மகிழுந்திடு நாள்
சீருல காரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடுநாள்
மந்த மதிப்புவி மானிடர் தங்களை வானி லுயர்த்திடுநாள்
மாசறு ஞானியர் சேரெதி ராசர்தம் வாழவு
முளைத்திடு நாள்
கந்த மலர்ப்பொழில் சூழ்குரு காதிபன கலைகள
விளங்கிய நாள்
காரமர் மேனி யரங்க நகர்க்கிறை கண்கள்
களித்திடுநாள்

அந்தமில் சீரமண வாள முனிப்பர னவதரித் தருளியநாள்
அழகு திகழுந்திடு மைப்பசி யிலதிரு மூலமதெனு நாளே. (8)

சதுமறையு முபநிடத மவையாவும் நாரணனை வணங்க வருநாள்
சகலகுண சம்பன்ன ரெதிராசர் பாடியமு மோங்க வருநாள
மதிதவழு மணிமாட மதிளரங்கா மாறனுரை கேடக வருநாள்
வளையாழி பொறிகொண்ட தோளின்மிசை சீரியர்கள் கூட வருநாள்
பதியொருநாற் றெட்டவையுள் சீசைல மனுநெறியோர் ஓத வருநாள்
பல்லாண்டு பாடியிவர் வாழ்கவினி நெடிதுமென ஒலிக்க வருநாள்
அதிமதுர கவிராசர் சடகோபர் தாளிணைகள் ஏத்த வருநாள்
அழகாரு மாமுனிவன் படிவந்த ஐப்பசியில் மூல மெனுநாள. (9)

வாதுசெய என்றுசில வாதியாகள் வநதுமன முறியவெதிர் நிற்ப ரொருபால்
வாழியென வேபெரிய சாபமற என்றுசிலா வந்தனைகள் செய்வ ரொருபால்
போதுமினி வாதமுன பாதமருள் என்றுபுகழ் கொணடுசிலா நிற்ப ரொருபால்
பொங்கிவரு மெங்கள்வினை மஙகவரு ளென்றுசிலர் போற்றியெதிர் நிற்ப ரொருபால்
ஈதிவைகி டக்கமறை நூற்றமிழ்தெ ரிந்துசிலர் ஏதமற வாழவ ரொருபால்

ஏதமற வாதுலர்கள் பேதையர்கள் மயங்கிநிரை
செய்துகொடு நிற்ப ரொருபால்
மாதகவி னுலுலக மேழையும ளிக்கவென வந்தவெதி
ராச னடிசேர்

மாமுனிவர் தீப மருளாளர் மணவாளமுனி
மன்னுமிடம் வாழும் வளமே,(10)
தீய இருவினைகள் போயிடவும் தேறு மனமுடைய
தோர்திறலும்
காய மினியணுகா வகையும் காசி னியில்மிக வறுவொழிவும்
மாய னடியிணைக ளோடுறவும் வாழவும் பரமபத மேயுதவும்
சீயர் திருவடிக ளேசரணம் சீயா திருவடிக ளேசரணம் (11)

துங்கப் புயமும் புரிநூலும் சோதி மதிமுகமும்
தங்கு கருணைத தடங்கணணும் செநதா மரைக்கழலும்
மங்கைக கலிய னருள்கொணட மாமண வாளமுனி
செங்கைத் தலஞ்சோ திருதணடும் சிநதை யுறைநதனவே(12

இவர் எம்பெருமான் திருவுளளத்திற்கு அதிசயாவஹ மாயச செய்தருளிய கைஙகர்ய வைபவஙகளாவன

இவரது ஆசார்யரான திருவாயமொழிப் பிள்ளை இவரை அழைத்து சபத புரஸ்ஸரமாய் "ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களில பல காலும கண வையாதே ஸ்ரீ பாஷ்யத்தை ஒருகால் கேட்டும் பரவசனம செயதும நமக்கும் எம்பெருமானுருககும் ப்ரீயமாகத் திருவாயமொழி முதலான அருளிச் செயல்களிலே அநவரதம் பரிசீலனம் பண்ணிக் கொண்டு பூர்வர்களைப் போலே பெருமாளுககு மங்களா சாஸநபரராய் கோயிலிலே நித்யவாஸமாக எழுந்தருளியிரும்" என்று நியமித்தபடியே ஜீயரும் ஸ்வாபீஷ்ட சிஷ்ய ரான வானமாமலை ராமானுஜ ஜீயருடன கோயிலிலே நிரய வாஸமாய் எழுந்தருளியிருந்து,

[1] "ஸ்ரீமத் ரங்கம் ஜயது பரமம் தாம தேஜோநிதாநம், பூமா தஸ்மிந் பவது குசலீ கோபி பூமாஸஹாய | திவ்யம் தஸ்மை திசது விபவம் தேசிகோ தேசிகாநாம் காலே காலே வரவரமுநி கலபயந மங்களாநி ||"

என்கிறபடியே பெரிய பெருமாளுக்கு அதிசயாவஹமான மங்களாசாஸநபரராய் நித்ய வாஸமாய எழுந்தருளியிருந்து, பூருவாசாரியர்கள் போதமனுட்டானங்களையும் ஆராய்ந்து அனுஷ்டிக்குமவராய் தர்சந ஸாம்ராஜ்யம் பண்ணித் திசை விளக்காய நிற்கின்ற திருவரங்கத்திலே திக்குற்ற கீர்த்தியை யுடையராய், ஸ்ரீரங்க ஸ்ரீக்கு மங்கள தீபம் போலே

[2] "ஸமுநிஸ் ஸௌம்ய ஜாமாதா ஸர்வேஷாமபி பச்ய தாம் | ஸ்ரீஸகஸ்ய நிதேசேந சிச்ரியே தேசிகச்ரியா ||"

என்று தேசிக ஸ்ரீயாலும் மிகவும் விளங்கா நிற்க, இதைத் தேசாந்தரஸ்தரெல்லாரும் கேட்டு,

[3] "தத. ஸமுத்ஸுகா ஸர்வே சதசோதஸ ஹஸ்ரச ||"

என்கிறபடியே தேசாத் தேசங்களில்நின்று வந்து அநேக மாயிரம் பேர்களும் ஆச்ரயிகக, அவர்களை யெல்லாம் க்ருபை செயதருளிக்கொணடு எழுநதருளியிருந்து அரங்கேசாக்கு ஈடளிததுச் சாற்றி ஸம்மாணிதராய அநேக சேதநர்கள் அநு ஸந்தித்து உஜ்ஜீவிக்கும்படியாய். தத்வத்ரய வ்யாக்யாநம், ரஹஸ்யத்ரய வ்யாக்யாநம் ஸ்ரீவசனபூஷண வயாக்யாநம், ஆசார்ய ஹ்ருதய வ்யாக்யாநம், ஜ்ஞாநஸார ப்ரமேயஸார

---

[1] श्रीमद्रङ्गं जयतु परमं धाम तेजोनिधानं, भूमा तस्मिन्भवतु कुशली कोपि भूमासहायः। दिव्यं तस्मै दिशतु विभवं देशिको देशिकानां कालेकाले वरवरमुनिः कल्पयन्मङ्गलानि ॥

[2] "समुनिस्सौम्यजामाता सर्वेषामपि पश्यताम्। श्रीसखस्यनिदेशेन शिश्रिये देशिक श्रिया ॥

[3] "ततस्समुत्सुकास्सर्वे शतशो थसहस्रशः

வ்யாக்யாநம், பெரியாழ்வார் திருமொழி வயாகயாநம், இராமாநுச நூற்றந்தாதி வ்யாக்யாநம், ஈட்டு ப்ரமாணத் திரட்டு, தத்வத்ரய ப்ரமாணத் திரட்டு, ஸ்ரீவசநபூஷண ப்ரமாணத் திரட்டு, உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி ப்ரபந்தம், யதிராஜ விம்சதி, திருவாராதந க்ரமம், கோபால விம்சதி, கமலாஸ்துதி, முதலாக அநேக ப்ரபந்தங்களையும் அருளிச் செயது வாழ்வித்தருளினர். இவர் திருவடிகளிலே ஆச்ரயித்த அநேகம் ஆயிரம் முதலிகளில பரதாநரா யிருக்குமவர்கள் —

(1) வானமாமலை ராமாநுஜ ஜீயர், (2) பட்டர்பிரான் ஜீயர், (3) திருவேஙகட ஜீயர், (4) கோயில் கநதாடையண்ணன், (5) ப்ரதிவாதி பயஙகரம் அண்ணன், (6) எறும்பி அபபா, (7) அப்பிளளை, (8) அப்பிள்ளார் இவ வெணமர்களும ஸவாமி பெரிய ஜீயருடைய அஷ்டதிக்கஜங்களாவாாகள இபபடி அநேகம சிஷ்யாகளுடன் தாசநததை வளர்ததுக் கொணடு எழுபததுமூன்று திருநக்ஷததிரம பெரிய பெருமாளுக்கு மங்களாசாஸநபரராய எழுநதருளியிருந்து ஜகத்தை வாழவித்தருளினா இவா தீர்தத திவஸம் இருக்கும்படி என என்னில் —

[1] கும்பம் பாஸ்வதி யாதி தத்ஸுததிநே பக்ஷே வளர்க்ஷேதரே தவாதச்யாம் ச்ரவணர்க்ஷபாஜி ருதிரோத்காரியாக்ய ஸம்வதஸரே | தீபக்த்யாதி குணாநவிதோ யதிவராதீநாகிலாத்மஸ்திதி ஸ்ரீ வைகுணட மகுண்ட வைபவமகாதகாந்தோபயநதா முனி |

எனறிருககும

[1] कुंभं भास्वति याति तत्सुतदिने पक्षे वळक्षेतरे द्वादश्यां श्रवणर्क्षभाजि रुधिरोद्गार्याख्यसंवत्सरे। धीभक्त्यादिगुणान्वितो यतिवराधीनाखिलात्मस्थितिः श्रीवैकुण्ठमकुण्ठवैभव मगात्कान्तोपयन्ता मुनिः ॥

வானமாமலை பெரிய ராமானுஜ ஜீயர் ஸ்வாமி. ச்ரிய பதி யாய் ஸ்ரீவைகுண்ட நிலயனாய் நித்ய முக்தாநு பாவ்யனான ஸர்வேச்வரன், இருள்தரு மாஞாலமான இந்த லீலா விபூதி யிலே "[1] ஈச்வரோஹம் அஹம்போகீ" என்கிறபடியே அவனை இல்லை செய்தும், [2] கிம் தேந நக்ருதம் பாபம் சோரேண ஆத்மா பஹாரிணா" என்கிறபடியே ஸர்வா நர்த்த மூலமான ஆத்மாபஹாரத்தைச் செய்தும், ஜந்ம ஜரா மரணங்களாலே, அபிபூதராய் க்ருத்யாக்ருத்ய விவேகமின் றியே ஸம்ஸரித்துத திரிந்துழல்கின்ற பதத சேதநர்களைக் கண்டு, தம்முடைய நாராயணத்வ ப்ரயுக்தமான குடற் றுடக்காலே, [3] "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து கித:" என்கிறபடியே மிகுந்த துககத்தை யுடையனாய் தயாபரவசனாய்த் தனது ஆஜ்ஞாரூபங்களான சருதி ஸ்ம்ருதீ திஹாஸ புராணாதிகளாலே நிஷ்கர்ஷிக்கப்பட்ட ஆத்ய மநூதித ஸ்வரூபோ பாய புருஷார்த்த ப்ரதிபாதக பத த்ர யார்த்த நிஷ்டையை ஸகல சேதநரு மறிநது உஜ்ஜீவிக் கைக்காக [4] "அஹம் சிஷ்யாச தாஸீச" எனகிறபடியே ப்ரதம சிஷ்யையான பெரிய பிராட்டியார் முகமாய ஸேனை முதலியாருக்கும் ப்ரபந்நஜந கூடஸ்தரான ஆழ்வாருக்கும் க்ருபை செய்து அவ்வாழவார் முதலாக நாத, யாமுந, யதிவர, வரவரமுநி வரமங்கைமுநி, பர்யநதமாக ப்ரஸாதித்து தளித்து உஜ்வலமாம்படி குருபங்கதி ஹாரததை "பல தேவர்ககோர் கீழக்கன்றாய" எனறும் [5] "கலௌ க சித் பவிஷ்யதி" எனறும், [6] "தச்சிஷ்யாக்ரஸரோ பரோ விஜ

---

[1] ईश्वरोहमहं भोगी ।

[2] किन्तेन नकृतं पापं चोरेणा त्मापहारिणा ।

[3] व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः ।

[4] अहं शिष्याच दासी च ।

[5] कलौ कश्चिद्भविष्यति ।

[6] तच्छिष्याग्रसरः ऽपरो विजयते रामानुजाख्यो मुनिः ॥

யதே ராமாநுஜார்யோ முநி " என்றும் சொல்லுகிற படியே முதலிலும் நடுவிலும் கடையிலும் ராமாநுஜ ரத்னங்களாலே அலங்கரித்துப் பேணியருளினுன்.

ச்ரிய பதி தொடங்கி மேன்மேலும் அபிவ்ருத்தமாய் வரவர முனிவன் வரை வந்துள்ள ஸத்ஸம்ப்ரதாயம் வான மாமலை ராமானுஜ ஜீயரிடத்தும் அவர் அஷ்ட திசாகஜங்க ளிடத்தும் அநத வானமாமலை ஜீயர் தொடங்கி இனறுவரை அவிச்சின்னமாய் வருகிற அவா பரம்பரையிலும வயவஸ்திதமாய் ஏகரூபமாய் நடந்து வருவது எல்லோராலும் அறியப்பட்டதேயாகும்.

எம்பெருமானுர், வரவரமுனி இவர்களின் வைபவங் களை குருபரம்பரா பரபாவமும் யதீநதர ப்ரவண ப்ரபாவ மும், நாம் நன்கு அறிந்துகொள்ளும்படி அவற்றைப் பரக்கப் பேசுவது போலவே, இவவரமங்கை முனிவன் வைபவங்களை யும் நாம் எல்லோரும் நன்கு உணர்ந்து உஜ்ஜீவிக்கும் வண்ணம் அவர் ஸந்நிஹித காலத்தவரால எழுதி வைக்கப் பட்டுளள ககநகிரி முநிசரிதம் முதலிய க்ரந்தங்கள் பரக் கப் பேசியிருப்பதைக் காணலாம்.

பூர்வாசார்யர்களுடைய உக்த்ய நுஷ்டானங்களைத் தமது அநுஷ்டாநங்களாலே ப்ரகாசிப்பித்துக் கொண்டு போரும் வானமாமலை ராமானுஜ ஜீயருடைய ஓராண்வழி ஸம்ப்ரதாயஙகளை உஜ்வலமாக்கும் அவர் ப்ரபாவங்கள் பல. அவைதான் அவதாரத்வம், ஆசார்யதவம் முதலியனவாகும். இவை யதீநத்ர ப்ரவண ப்ரபாவத்திலே எம்பெருமான் களாலும் வரவர முனிவராலும் ஸூசிப்பிக்கப்பட்டும், வாசிகமாக அறிவிக்கப்பட்டும் இருப்பதை நாம் நன்கு காணலாம். இவற்றை விசதமாகவும் விஸ்த்ருதமாகவும் முதலில் வெளியிட்ட ப்ரபந்தம் ககநகிரி முநி சரிதமாகும்.

இங்குச சிலர், ககநகிரி முநி சரிதம் முதலிய ப்ரபந்தங் கள் ப்ரசஸ்த பரமாணமாகமாட்டா, ஸர்வ ஸம்மதமான

தன்றோ ப்ரசஸ்த ப்ரமாணமாகும். வானமாமலை ராமானுஜ ஜீயர் ஸம்பந்திகளே உத்தேசயமாகக் கொளளும் இப் பிரபந்தங்கள ப்ரசஸ்தங்கள் எனபது எங்ஙனே ? எனச் சங்கிக்கக்கூடும். அதுசரியனறு. அப்படியே கொள்ளவேணு மென்று அபிபபிராயமாகில் "கலியுங்கெடும் கணடுகொள் மின்" [1]"கலௌ க சித் பவிஷ்யதி" என்று கூறும் பரமாணங்களையும் மநுஷ்ய ஜங்மாக்களில பலர் ஒப்பவில்லையே-[2] "ஜகத் ரக்ஷாபரோ நந்தோ பவிஷ்யதபரோ முநி" என் பதையும் நம்மிராமாநுஜ ஸித்தாநததத்தைச சார்நதவாகளி லும் சிலர் அங்கீகரிக்கவிலலையே. எனவே உடையவரும் அவதாரமில்லை, மாமுனிகளும் அவதாரமனறு என் றலலவோ சொலலவேணடி வரும் நிற்க நமது ஆசாரா நுஷ்டானங்களும் ஸாவாப்யுபகத மில்லாமையால அபரமாணமாகுமே. எனவே, முடிவாக இததகையோர் வேதங் களையும் ஆழ்வார்களையும ஆசார்யர்களையும் ஈச்வரனையும் இல்லை செய்து ஸமஸாரத்தில ஆழ்ந்தமிழநதவே நேரிடும். ஆகையால் பரமாணமாவது—சருதிஸ்ம்ருதீதி ஹாஸபுராணங்களும் "யதயதாசரதி சரேஷ்டː" எனற சரேஷ்ட ஸமாசாரஙகளும அததகைய ஆசாரவானகளுடைய வசன முமேயாகும். இநத வசனங்களுககு பராசஸ்தயமாவது ப்ராஜஞ ஆதரமும் இதர ப்ரமாண நுஸரணமுமேயாகும். இநத ககநகிரி முநிசரிதமும பராஜ்ஞராலேயே செயயப பட்டதும் இதர பரமாண நுஸாரியுமான க்ரநதமாகும்

யதீநத்ர பரவண ப்ரபாவம செயதருளிய பிள்ளை லோகம் ஜீயர் காலத்திற்கு சிறிது பிற்காலத்தில ஸ்ரீவான மாமலை ராமானுஜ ஜீயரின அஷடதிக்கஜங்களில் ப்ரதான ராய எம்பெருமானருககு திருக்குருகைபபிரான பிள்ளானைபபோலே ஜீயரால் ஞானபுத்ரனக அபிமானிககபபெற்ற

---

[1] कलौ कश्चिद्भविष्यति ।

[2] जगद्रक्षापरोनन्तो भविष्यत्यपरोमुनि ।

ராமானுஜன் பிள்ளாவைக்கு [1] " ஆத்தானி தீஹ விதிதோ வரதாரய சர்மா காரீந்த்ரஸூநி க்ருதிஸாகர பூர்ண சந்த்ர |" என்கிறபடியே பகவத்விஷயம் வரதார்யரென்றும் ஆத்தானென்றும் ப்ரஸித்திபெற்ற குமாரா அவதரித்தார். அவருக்கு—[2]" யஸ்யாபூத் தநயோ லோகேவிதிதஸ் ஸுந்த ராஹவய,| யதாத்மநா வதீர்ணோஸௌ வாந சைலேச ஸுந்தர ||" என்றும் [3] " யச்சிஷ்யபாவ மநவாப்ய சடாரி வேதபாவம ப்ரபோத்து மநலம் பஹுசாஸ்த்ரவித்பி:| ஸோயம் ஹி ஸுந்தரகுரு விஜயத்வஜோ பூத் ஸித்தாந்த ஸீம்நி யதிராஜகுரோர் மஹாத்மா||" என்றும் சொல்லு கிறபடியே வானமாமலைப் பெருமாள் அவதார விசேஷ மெனறும் பகவத்விஷய ஸூக்ஷ்ம தாத்பர்ய வேத்தாவென் றும் ராமானுஜ ஸித்தாந்த நிர்வாஹகரென்றும் சாஸ்த்ர ஜ்ஞாகளாலும் கொண்டாடப்பட்ட சுந்தரார்யர் என்னு மவர் குமாரராக அவதரித்தார அந்த ஸுந்தரராயரை அழைதது தத்காலத்தில் வானமாமலை ஆஸ்தாநததை அலங்கரித்த ராமானுஜ ஜீயர் ககநகிரி முனிவர் விஷயமான பூர்வீக லேகநகளேயும பூர்வாகளின் ஐதிஹ்யரூப வசனங் களையும் யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம் முதலியவற்றையும்

[1] आत्तानितीह विदितो वरदार्यशर्मा कारीन्द्रसूनुकृति सागरपूर्णचन्द्रः ।

[2] यस्याभूत्तनयो लोके विदित स्सुन्दराह्वयः ।
यदात्मना ऽवतीर्णोसौ वानशैलेशसुन्दरः ॥

[3] यच्छिष्यभाव मनवाप्य शठारिवेदं
भावंप्रबोद्धुमनलं बहुशास्त्रविद्भिः ।
सोयंहि सुन्दरगुरु विंजयध्वजोभूत्—
सिद्धान्तसीम्नि यतिराजगुरोर्महात्मा ।

ப்ரமாணமாகக் கொண்டு ஸம்ஸ்க்ருத பாஷையில் பத்யரூப மாய அவா விஷயமாய் ஒரு க்ரநதம் செயயும்படி நியமித் தருளினுர். அவரும ஸ்வாமி நியோகத்தை சிரஸா வஹித்துச் சிநதிததுக்கொண்டிருக்க, அன்று ராத்திரியிலே ஸ்வப்நத் தில, தெயவநாயகன் எழுந்தருளி, ககநகிரி முநிவரின் சரித் ரத்தை ஸவிஸ்தரமாய எழுதும்; அதைத் தலைகட்டுவது நாமன்றோ, உமககெனன பரம், நீர் சிநதிக்கவேண்டா" என்று நியமிக்க, அவரும் கணவிழித்து ஸ்வப்ந விசேஷம் இருநதபடி என் எனறு விஸ்மிதராய ஜீயர் ஸ்வாமியிடம் ஸ்வப்ந வ்ருத்தாநதையும் தெரிவிதது மிகவும் ஸந்துஷ்ட ராய் இந்த ககநகிரிமுநி சரிததை அருளிச் செய்தார். எனவே இசசரிதம் பகவத் பரிகருஹீதமும் ஆசார்யருசி பரிக்ருஹீதமும் சிஷ்டபரிக்ருஹீதமுமாய இருக்கும்.

மேலும் ஒரு பெரியோரின் வைபவத்தைக் கூறுமவர் அவர் ஸம்பநதம் பெற்றிருந்தாலொழிய அதை முற்றிலும் கூற முடியாது இதை யதீந்த்ர ப்ரவண பரபாவம் குரு பரம்பரா ப்ரபாவம் முதலிய க்ரநத கர்த்தாக்களிடமும் காணலாம் ஸம்பநதமிலலாத அங்யர்கள் வைபவங்களையு மறியார், அறிந்தாலும் அதை க்ரந்த ரூபமாய்ச் செய்யவும் முன்வரமாட்டார்கள் எனவே இந்த ககநகிரிமுநி சரித மருளிச் செயதவரும் அநத ஸ்வாமியின் சிஷ்ய பரம்பரை யைச் சார்ந்தவராய் ப்ராஜ்ஞராய அந்தரங்கராய் ஸமீப காலஸ்தராய ஆசார்ய பதம் நிர்வஹித்துப் போருமவராய் இருக்கையாலே இவருடைய க்ரந்தம் ப்ரசஸ்ததம ப்ரமாண மென்னத் தட்டில்லை. இப்படி ஒப்புக் கொள்ளாதவர்கள் பின்பழகராம் பெருமாள் ஜீயர் அருளிச் செயத குருபரம் பரா ப்ரபாவத்திற்கும் பிள்ளை லோகம்ஜீயர் அருளிச்செய்த யதீந்தர ப்ரவண ப்ரபாவததிற்கும் ப்ராமாண்யத்தை ஸமர்த்திக்க முடியாததோடு தங்கள் குல வைபவங்களை யும் குருகுல வைபவங்களையும் ப்ரகாசிப்பிக்கும் ப்ரமாணங்

களையும் இல்லை செயது நாஸ்திகா க்ரேஸரராகத தேறுவர் என்னத் தட்டில்லை.

மேலும் [1] "சிஷ்யாசார்ய தநுத்வயீம்......ராமாநுஜா க்யோமுநி" எனறும, [2] "ஸ்ரீராமாநுஜ யோகிந, ப்ரதிநிதி வாநாத்ரியோகீசவர" என்றும, [3] "பக்த்யா நமந சிந்தயே" எனறும் மஹாராயா முதலியோா கூறிய வசனங்களோடு ஸமவாதியான [4] "ஆஸ்திகம தைஷ்டிகம்" என்றும், [5] "ரம்யோபயநதரம்சக" எனனு மிதயாதி வாகயங்கள் [6] "ஸ்வபநே ப்ருஹதய திநதரஸ்ய...... ஸ்வர்ணாதிபத ஸம்ஞக" எனபன போனற யதீநதர ப்ரவணப்ரபாவததில சொல்லப்படுகிற அர்த்தஙகளையே உட்கொண்டு பேசிற்றே பேசுவனவாகையால் ககநகிரி முநி சரிததின ப்ராசஸதயததிற்குக் குறையில்லை

இனி இவவாறு ப்ரசஸ்தங்களான [7] "ஆஸ்திகம் தைஷடிகம் தத்ர மதயமம் தநயம். ...ஸ்ரீ ஸௌம்ய வரதாபிதம, [8] "ரக்தாக்ஷ்யாஹவய வத்ஸரே.... ரம்யோபயந்த்ரம்சக [9] "ஸ்ரீமத் காரிகுமார..... கலப்தேஜ்ய வம்ச்ய ஸுத" என்னும் ககநகிரி முநிசரித வசனஙகளை

---

[1] शिष्याचार्यतनुद्वयीं . . . रामानुजाख्योमुनि. ।

[2] श्रीरामानुजयोगिनः प्रतिनिधि र्वानाद्रियोगीश्वरः ।

[3] भक्त्या नमन्चिन्तये । [4] आस्तिकं दैष्टिकं ।

[5] रम्योपयन्त्रंशकः ।

[6] स्वप्ने बृहद्यतीन्द्रस्य . . . स्वर्णादिपद संज्ञकः ।

[7] आस्तिकं दैष्टिकन्तत्र मध्यमंतनयं . . . श्रीसौम्य वरदाभिधं ।

[8] रक्ताक्ष्याह्वयवत्सरे . . . रम्योपयन्तांशकः ।

[9] श्रीमत्कारिकुमार . . . क्लृप्तेज्य वंश्य स्सुतः ।

[1]" சிஷ்யாசார்யதநுத்வயீம்... ..ராமானுஜாக்யோ முநி:"| [2]" ஸ்ரீ ராமாநுஜ யோகிந ப்ரதிநிதிர் வாநாத்ரி யோகீச்வர [3]" ஸ்வப்நே ப்ருஹத்யதீந்த்ரஸ்ய .....ஸ்வர்ணாதி பதஸம்ஜ்ஞக:" என்பவை முதலிய ஆப்ததம பூர்வ வசனங்களோடும் யதீந்த்ர ப்ரவண ப்ரபாவத்தோடும் ஐககண்ட்யத்தைப பெற்று ப்ரபலதமமாய [4]" ஜகத்ரக்ஷாபரோநந்தோ பவிஷ்யத்ய பரோ முநி " என்கிறபடியே அஹிபதி புநரவதாரமான மணவாள மாமுனிகள ஆசார்ய ரூபியாயும் வானமாமலை ஜீயர் சிஷ்யராயும் இப்படி ஏககாலததிலே மணவாள மாமுனிகளே ஆசார்ய சிஷ்ய ரூபேண அவதரித்தார் என்பதை ஸாதித்துத் தருவதுமாகும்.

"ஸ்வப்நேபருஹத் யதீநத்ரஸ்ய" என்கிறவசனம் வானமாமலை ஜீயரின அவதாரத்வே எப்படி ப்ரமாணமாகும் என்னில், பெரிய பெருமாள் கநதாடை யண்ணனுக்கு பெரிய ஜீயர் திருவடிகளில் ப்ராவண்ய முண்டாக்குகைக்கு அவா ஸ்வப்நத்திலே இராமானுசனும் இராமாநுஜாம்சமான முதலியாணடானுமாய் ஆசார்ய சிஷ்யர்களாய் ஸேவை ஸாதித்தாப்போலே திருவேங்கட முடையானும் பெரிய கேளவி ஜீயர் ஸ்வப்நத்திலே மணவாள மாமுனிகளும் வானமாமலை ராமானுஜ ஜீயரும் ஆசார்ய சிஷ்யாவதாரம் என்று காட்டுகைக்காகவே திருமலை மேலைக் கோடி தொடங்கி கீழக் கோடி முடிய நீண்ட பெரிய திருமேனியோடு தெற்கு நோக்கி ஒருவர் சயனித்துக்கொண்டிருப்பதாயும், அவர் திருப்பாதத்தருகே த்ரிதண்ட காஷாயதாரியாய் ஒருவர் நின்று கொண்டிருப்பதாயும், அங்கு சமீபத்தில்

[1] शिष्याचार्यतनुद्वयीं . . . रामानुजाख्यो मुनिः ।

[2] श्रीरामानुजयोगेनः प्रतिनिधि र्वानाद्रियोगीश्वरः ।

[3] स्वप्ने बृहद्यतीन्द्रस्य स्वर्णादिपदसंज्ञकः ।

[4] जगद्रक्षापरोनन्तो भविष्यत्यपरो मुनिः ।

போக்கு வரத்துள்ளவர்களை இவர்கள் யாவர் எனக் கேட்க "கீழே சயனித்து இருப்பவர் முப்பத்தாறாயிரப் பெருக்கரான அழகிய மணவாளப பெருமாள் நாயனார் என்றும், நிற்பவர் அவர் சிஷ்யரான பொன்னடிக்கால ஜீயர்" என்றும் சொலலக் கேட்டு ப்ரபுத்தராய "இதொரு ஸவப்நமிருந்தபடி என" என்று விஸ்மயப்படும்படி செய்தது, இவர்களிருவரும் ஓருருவமே ஈருருவமாகிய ஆசார்ய சிஷ்யாவதாரம் என்பதை அறிவிகைக்காகவே எனவே அஹிபதி புநரவதாரமான மாமுனிகளும் ராமானுஜ ஜீயரும் நாராயணனும் நரனும் போலே ஓருருவே ஈருருவமென்னத் தட்டில்லை.

மற்றையோருக்கு [1]"ருசிர ஜாமாத்ரு யோகீந்த்ர பாதாச்ரயம" எனறு மாமுனிகளின் திருவடிகளி லாச்ரயித்த பின்பு விலக்ஷண ஸம்பந்தம் தோற்றுமாப் போலன்றிக்கே [2]"பாதரேகா மயம் ஸதா" என்கிறபடி மாமுனிகளின் க்ருபையாலே அவதரித்த தனியனே "ஸதா" என்று பூத பவிஷயத் வாத்தமானங்களான முக்காலத்திலும் பிரியாத அவயவபூதா வானமாமலை ராமானுஜ ஜீயர் எனச் சொல்லுகையாலே "பெரிய ஜீயருடைய அம்சாவதாரமே, வானமாமலை ஜீயா" எனனுமதுக்கு இது போரச சேர்நதிருக்கும்.

இந்த வாநாத்ரி லக்ஷ்மண முநியும் அரண்ய வாஸத்தோடு அயோத்யா வாஸத்தோடு வாசியறத தொடர்ந்தடிமசெயது [3]"லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந" எனவிருக்கு மவரைப்போலவே வரவர முனிகளின் ஸர்வாவஸ்தைகளிலும் தொடர்ந்தடிமை செய்யுமவராய அவதார விசேஷமாயு மிருப்பர்.

---

1. रुचिरजामातृयोगीन्द्र पादाश्रयम् ।

2 पादरेखामयं सदा । 3 लक्ष्मणो लक्ष्मिसंपन्नः ।

இந்த ராமானுஜ முனிவரின் அவதாரம் வெகு காலத்திற்கு முன்னரே திருவேங்கடவன் திருமார்பகத்துறையும் அலர்மேல் மங்கையாலும ஸூசிதமாயிருக்கும் எங்ஙனே என்னில்? வானமாமலை ஜீயர் சில்காலம் திருமலையில் எழுந்தருளியிருந்து பிறகு சீவரமஙகைக்கு எழுந்தருள உத்யோகித்த பொழுது [1]"ஸ்வப்நே ததாஸ்யாங்ககதா ஸமாநவர்ணா| தாதேதி ஸம்போத்ய ... நயஸ்வேத்யவதத புரம்த||" என்று நாய்ச்சியார் இவரது ஸ்வப்நததிலே, "அப்பா, என்னை உமது ஊருக்கு அழைததுப் போம்" என்று ஒரு பெண் வடிவு கொண்டு மடியிலிருந்து நியமிததருளி அப்படியே பெரிய கேள்வி ஜீயர் ஸ்தலததார்கள் முதலானவர்களின் ஸ்வபநத்திலும் "எங்கள் ஐயரான வானமாமலை ராமானுஜ ஜீயருடன் கூட என்னை வானமாமலைக்கு அனுப்புங்கோள" என்று நியமிக்க அவாகளும் வானமாமலை ஜீயா ஸந்நிதிக்கு வநது [2]"ஸ்ரீ வேங்கடேசாய ப்ரா .... . யேசவரீ| நிவாரிதா சேஷகிரீச ... .ஸுப்ரதிஷ்டா||" என்கிறபடியே திருவேஙகட முடையானுககாகத தனிக் கோவில் நாயச்சியாா அவதரிபபிககபபட்டு பரதிஷ்டிபபிக் கப்பட்டதாயும் திருவேஙகட முடையானுக்குத் திருக் கல்யாணம் செயயப்புககவாறே அவன திருமார்வில் நாய்ச்சியார் வருங்காலத்தில் நிகழப்போகும் இநத வ்ருத்தாநதத்தைச் சிநதித்தே தனிக்கோவிலும் திருக்கல்யாணமும் வேண்டாமென்று நியமித்தபடியால அவை யிரணடுமின்றி ஸூபூஜிதையா யிருப்பதாயும், அந்த நாயச்சியார் திரு

[1] स्वप्ने तदास्याङ्कगता . . . समानवर्णा ।
तातेति संबोध्य . . . नयस्वेत्यवदत्पुरन्ते ॥

[2] श्रीवेङ्कटेशाय पुरा . . लयेश्वरी ।
निवारिता शेषगिरीश . . . सुप्रतिष्ठा ॥

வுள்ளம் தேவரீர தமக்குப் பிதாவென்றும் தெயவநாயகன் பர்த்தா வென்று மிருப்பதால், தேவரீர் நாயசசியாரை எழுந்தருளப் பண்ணிக்கொணடு போகவேண்டு மென்று ப்ரார்த்தித்தார்கள். பினபு ஜீயரும் அபபடியே எழுநதருளப் பண்ணிப்போய் அந்த நாயசசியாருக்கு தெய்வ நாயகனேடு திருக்கலயாண மஹோத்ஸவம் செய்து வைத்தார் என்பது இன்றளவும எல்லோராலும் ஒபபுக்கொளளப்படும அபாதிதமான வருததாநதம்

இந்தச் சீவரமங்கை நாயச்சியார வருத்தாநதத்தால் திருமலை அலர்மேல் மஙகை நாயசசியார் நிஷேதித்ததும் வானமாமலை ராமாநுஜ ஜீயர் அவதரித்து அந்த நாயச்சியாருக்கும் தெயவநாயகனுக்கும் திருக்கலயாணம் நடததப் போகிருர் எனபதை ஸாவஜ்ஞையான தான் உணர்நதமையாலே யாகும். அங்ஙனன்றியே கொண்டால் [1]"யாபிஸ்தவம் ஸ்தநபாஹு த்ருஷ்டிபிரிவ ஸ்வாபி பரியம் ச்லாகஸே" என்னபபடுமவளுககு பதநயநதராவதாரததிலே நிஷேதம் தான் கூடுவது எங்ஙனே? நிற்க ஸர்வஜ்ஞையான அலர்மேல்மங்கை இந்த நாயசசியாரை அவதரிக்கச் செய்யும் போதும் பிரதிஷ்டை செயவித்தபோதும் நிஷேதியாமல் திருக்கல்யாணத்தையே நிஷேதித்தமையாலே அவள் திருவுள்ளம் ராமாநுஜ ஜீயர் அவதாரததை எதிர்நோக்கியதே என்பது தன்னடையே தேறும் பொருளாகும்.

மேலும் "செய்த வேள்வியர் வையத்தேவர்" என்று ஆழ்வார் கொண்டாடும்படியான யோகிகளின் குலங்களிலே ஈச்வரன் தானே ஆசார்ய ரூபமாக அவதரிப்பன் எனபதற்கு அவன் வாக்யமே ப்ரமாணமாகும்--அதாவது [2]"அஹ

1 याभिस्त्वं स्तनबाहुदृष्टिभिरिव स्वाभिः प्रियं श्लाघसे ।

2 अहमाचार्य रूपेण भविष्यामि युगेयुगे ।
तत्रापि योगिनां पुंसां कुलेमहति जन्म मे ॥

மாசார்ய ரூபேண பவிஷ்யாமி யுகேயுகே| தத்ராபி யோகி நாம் பும்ஸாம் குலே மஹதி ஜந்மமே|| [1]விசிஷ்ய மே தேவி கலௌயுகே குரோ ஜநிர் பவித்ரீகலு ஸத்குலே மம|| த்ரிதண்ட காஷாய படோர்த்த்வ புண்ட்ரத்ருக் பவிஷ்யதீ ஸாஹி புஜிஷ்யபூயஸீ|[2] மத்பக்தா ஜ்ஞாநபூர்ணா யே பவிஷ்யந்தி கலௌ யுகே|| த்ரிதண்டிநோ பிமாநாந் மே ஸர்வே தே குருரூபிண| முக்தி பாஜோ பவிஷ்யந்தி ஸத்யோஹம் ப்ரப்ரவீமி தே||'' என்னுமிவை முதலியனவாகும் இவற்றால் கலி காலத்தில விசேஷித்து த்ரிதண்ட காஷாய தாரியான ஆசார்யாவதாரம் உணடென்றும், அவ்வாசார்யா பிமானத் தாலே பக்திமான்கள் முக்தியடையப் போகிறார்களென்றும் கூறப்பட்டதாகும். இவை எம்பெருமானார் அவதாரத் தைக் குறிப்பிடும் ப்ரமாணங்கள்* என்னும் விஷயத்தில விப்ரதிபத்தி பண்ணுவார் ஒருவருமில்லை. ஆயினும் இவற்றை உற்று நோக்கின, விசிஷ்ய என்றதனால அவதா ரத்தின அதவிதீயதவமும் அதன் பாஹுள்யமும் கூறிய தாயக் கொளளவேணும்.

நிற்க "விசிஷ்யமே தேவி" என்ற ஸ்ரீ சாஸ்த்ரத்தைத தொடர்நது கூறபபட்ட[3] "மதகாலாதநு பதமாக்ஷி

---

[1] विशिष्य मे देवि कलौ युगेगुरोर्जनि र्भवित्रीखलु सत्कुले मम।
त्रिदण्डकाषायपटोर्द्ध्वपुण्ड्र धृग्भविष्यती
साहि भुजिष्यभूयसी।

[2] मद्भक्ता ज्ञानपूर्णा ये भविष्यन्ति कलौ युगे।
त्रिदण्डिनो ऽभिमानान्मे सर्वे ते गुरुरूपिणः।
मुक्तिभाजो भविष्यन्ति सद्योहं प्रब्रवीमि ते।

[3] मत्कालादनु पद्माक्षि समयो लोपमेष्यति।
गुरुरूपस्य मे शक्तिं तत्र तत्र निधायवै।
समयं सङ्ग्रहीष्यामि नातिलोपो भविष्यति॥

ஸமயோ லோப மேஷ்யதி| குருரூப்ஸ்ய மே சக்திம் தத்ர தத்ர நிதாய வை| ஸமயம் ஸங்க்ருஹீஷ்யாமி நாதிலோபோ பவிஷ்யதி|" இதயாதி வாக்யத்தையும் [1]"ஜகத் ரக்ஷா பரோநநத", "ஆதியிலே அரவரசை அழைதது" என்றும், [2]"சிஷ்யாசார்ய தநுத்வயீம்", [3] "ஆஸ்திகம் நைஷ்டிகம்" என்றும் இத்யாதி வாகயங்களையும், [4]"அஹம் ஆசாாயரூபேண பவிஷ்யாமி" என்கிற வாக்யத்தோடு சேர ஐககண்டயம் செயது அர்தத விசாரம் செய்யும் போது, உடையவா மணவாள மாமுனிகள் வானமாமலை ஜீயர் பர்யநதமான அவதார பஹுத்வத்தை உட்கொண்டே இந்த வசனம் பரவருத்தமாயிறறு என்கையே ஸ்வரஸ ஸித்தமாகும். அபபடியின்றியே [5]"த்ரிதணடகாஷாய", [6]"த்ரிதணடிநோ பிமாநாந் மே" என்னும் வசனங்கள் எம்பெருமானார் ஒருவரையும் தான் கூறுவனவாகும்" எனக் கொள்ளில் கீழக் கூறிய "ஜகத் ரக்ஷாபரோ நநத" இத்யாதி வசனங்களுக்கு அபராமாணயம் வரும் எனவே [7]"மத்காலாதநு" என்ற இடத்திற்கு உடையவா அவதாரததின் கடைநிலையான வானமாமலை ஜீயர் காலத்திற்கு பினபு என ஆரததம் கொணடு அதனபிறகே ஆசார்யர்களிடம் சக்தயாவேசம் எனக கொள்ளத தகும். உடையவர் அவதாரததிற்குப் பிறகு சக்த்யாவேசம் எனக் கொணடால் அதற்குப் பின்புள்ள எம்பாரை ஸுதர்சநாம்சமென்றும், ஸ்ரீ பராசர பட்டரை ஸ்ரீ ரங்கநாதாம்சமென்றும் பிள்ளை லோகாசார்யரை தேவப்பெருமாள் அம்சம் என்றும் கூறும் வசனங்களெல்லாம் வயாஹதங்களாம் உடையவருககுப் பிறகு மணவாள மாமுனிகள், வானமாமலை ஜீயர் பர்யந்த

1 जगद्रक्षापरोनन्तः 2 शिष्याचार्यतनुद्वयीं ।
3 आस्तिकं नैष्ठिकं । 4 अहमाचार्यरूपेण भविष्यामि ।
5 त्रिदण्डकाषाय। 6 त्रिदण्डिनोभिमानान्मे ।
7 मत्कालादनु ।

மாக விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயமானது மேல்மேலெனப் பலவகையிலும் செழித்துத் தழைத்து வந்திருக்க "மத்காலாதநு" என்பதற்கு உடையவராகிய எனது அவதாரத்திற்குப் பிறகு ஸமயம் லோபமடையப் போகிறது" என்று அர்த்தம் கூறுவதும் ப்ரத்யக்ஷ விருத்தமாகும். உடையவர் அவதாரத்திற்குப் பிறகு எத்தனை மஹான்கள் அவதரித்து க்ரந்தங்கள் மூலமாகவும் ப்ரவசன மூலமாகவும் விசிஷ்டாத்வைத ஸமயத்தைப பேணியிருக்கிறார்கள் எனபதை அறியாதாரும் உண்டோ? எனவே "ஜகத்ரக்ஷா பரோநந்த." "ஆதியிலே அரவரசை" இத்யாதிகளான வசனங்களாலே யதிவர புநரவதாரமான மாமுனிகள் திருவநந்தாழ்வானுடைய பூர்ணவதாரமென்றும் "ரம்யோபயந்த்ரம் சக", "சிஷ்யாசார்ய தநுத்வயீம்", "பாதரேகாமயம்" இத்யாதி வசனங்களாலே அம் மாமுனிகளின் அம்சாவதாரம் வானமாமலை ஜீயர் என்றும், ஒரொன்று பூர்ணவதாரமாகவும் ஒரொன்று அமசாவதாரமாகவும் முறையிடுகிற ப்ரமாணங்களைக் கொண்டு நிர்ணயிப்பதே ஸாத்விக ஸம்மதமாகும். அதில் எமபெருமானுருக்குப் பின்பு எம்பார்முதல் திருவாய்மொழிப் பிளளை ஈறுக உள்ள ஓராண் வழி ஆசார்யர்களின் அம்சாவதாரதவத்தில் தனித தனி ப்ரமாண முண்டாகையால அவைகளினுல் அவர்கள் அவதார விசேஷமென்பது தேறுமாகையால் "விசிஷ்யமேதேவி" இதயாதி ஸ்ரீ சாஸ்த்ர வசனங்களாலே சொல்லப்பட்ட அவதாரம் மணவாள மாமுனிகள் வானமாமலை ஜீயர் பர்யந்தமா யிருக்குமென்பதும் ஸித்தம். ஸ்ரீ சாஸ்த்ரத்தில் "விசிஷ்ய" என்று கூறிய பதத்தின தாதபர்யநதான் தத விவரணமான "ஜகத்ரக்ஷா பரோநநத" "ஆதியிலே அரவரசை" "சிஷ்யாசார்ய தநுத்வயீம", "ரம்யோபயந்த்ரம்சக", "ஸ்வப்நே ப்ருஹத்ய தீந்த்ரஸ்ய" என்று மித்யாதி வசனங்களிலே வ்யாக்யானம் செய்யப்பட்டது என்பது அபலபிக்க முடியாத ஸித்தாந்தமாகும்.

எனவே உடையவர் அவதாரம், தத்புநரவதாரம், தச்சிஷ்யாவதாரம் என்னும் க்ரமத்திலே உடையவர் அவதாரத்தின் கடைநிலை வானமாமலை ஜீயரென்பதும் அதுபர்யந்தம் அம்சாவதாரமென்றும் அதற்குப் பின்பு வந்துள்ள ஆசார்யர்களிடம் சக்த்யாவேசம் என்பதும் ஸித்தமான அம்சமாகும்.

இனி கீழக்கூறியபடி வானமாமலை ஜீயருக்குப் பிறகு ஆசார்யாகளிடம் பகவான் செய்யும் சக்தயாவேசமும், இந்த ஜீயருடைய பரம்பரையில் பினருடி வரும் ஆசார்யர்களிடமே எனபது நிபுண நிரூபணம் பண்ணுமவாகளுக்கு வ்யக்தம். எங்ஙனே என்னில்? "குருரூபஸ்ய மே சக்திம் தத்ரதத்ர நிதாயவை" என்ற வசனத்திற்கு த்ரிதண்ட காஷாயதாரியாய குருவின் உருவம் தரித்த எனது சக்தியை (தத்ரதத்ர) அந்தந்த (உருவம்) த்ரிதணடகாஷாயாதிதாரிகளான ஆசார்யர்களிடத்திலே வைத்து ஸமயம் அதிக லோபத்தை யடையாமல் பாதுகாக்கப் போகிறேன் என்றே பகவத் வசனமாகையால் அந்தப் பரமபரையில வரும் ஜீயர்களிடம் சக்யாவேசமென்பதும் மறைக்கக்கூடாததாகும். "தத்ர தத்ர" என்பதற்கு இவ்வாறு அர்த்தம் கூறுவதே ஸ்வரஸ மாகும். மேலும் ஒரே கார்யார்த்தமாய ஒரே காலத்தில் அநேகரிடம் சக்த்யாவேசம் அப்ரயோஜகமாகையாலே இந்தப் பரம்பரையிலே பரம்பரையாய் வந்துள்ள யதித் தலைவர்களிடமே சக்த்யாவேசமென்பதும் நன்னடையே கிடைக்கக்கூடியதாகும். இவ்வர்த்தைத்தான் ஈச்வரனும் "மத்கடாக்ஷாபவேத் யஸ்ய மயிவா ப்ரணதோஹிய|: தஸ்ய தஸ்ய ஹருதிஸ்தோயம் பவிஷ்யதி நஸம்சய:||" என்று இப்படிப்பட்ட ஆசார்ய ரஹஸ்யங்கள் ஆசார்யனை எனது பூர்ண கடாக்ஷம் பெற்றவர்களுக்கே நெஞ்சில் படும். மற்றையோருக்குப் படாது என அருளிச்செயதான்

இனி இவரது ஆசார்யத்வம் ஆராயப்படுகிறது. தேவப் பெருமாள் ஸந்நிதியில் உடையவர் ஸந்யஸித்து ராமானுஜ முனி என்று அவரால் திருநாமம் சாற்றப்பெற்றாப் போலவே, அழகிய வரதரும் "ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்று ஆழ்வார் சரணம் புகுந்த வானமாமலைப் பெருமாள் திருமுன்பே, ஸந்யஸித்து ஸேவித்து நிற்க, "ஸ்ரீமத் வாநமஹாசைல ராமாநுஜ மஹாமுநே| இத்யா மந்தர்யாகரோந் நாம முநேரஸ்ய மஹாத்மந:" என்கிறபடியே பெருமாள் ராமானுஜ மஹா முனி என்று திருநாமம் சாத்திப் பெரிய பிராட்டியாரோடு சிந்தித்துத் தன் சோதிவாய் திறந்து "ஸ்ரீரங்கே யதிராஜவத்| ஸ்வதாமநி ஸர்வநிர்வாஹம குருஷ்வெ - த்யநவசாத் ததா" என்கிறபடியே கோயிலிலே நம்பிராமானுச முனி போலே நீர் நம் படைவீட்டில் கார்யங்களை யெல்லாம் நிர்வஹித்துப் போரும் என்று நியமித்தும், அங்குள்ள தம் ஸந்நிதி பரிகரங்களையும் மற்றும் ஸ்ரீவைஷ்ணவர்களையும் அருளப்பாடிட்டு "முநிம் பஜத்வ மாசார்யம் ப்ரிய மதயாத்தமேவமே" என்கிறபடியே "எனக்கு மிகுந்த ப்ரீதி பாத்திரமான இந்த ராமானுஜ முநியை எல்லோரும் ஆசார்யனாய் அடைந்து உஜ்ஜீவியுங்கோள்" என்றும் இவர் ஆசார்யத்வத்தை நியமித்து வெளியிட்டருளினார்

ஆனால் இவருக்கு ராமானுஜமுநி என்று திருநாமம் இடக் காரணம் என்? என்னில இவர் ராமானுஜ முநிவரின ஜ்ஞான ஸந்ததியில திருப்பேரனாராய் அவதரிக்கையாலே பிதாமஹனுடைய திருநாமத்தைப் பௌத்ரனுக்குச் சாற்றுவது ஸதஸம்ப்ரதாய ப்ராப்த மாகையாலேயாகும். உடையவரே மாமுனிகளாயும் அவரம்சமே வானமாமலை முனிவராயும் அவதரிக்கையாலே இவர் திருப்பேரனார் என்னத் தட்டில்லை.) நிற்க மணவாளமாமுனிகளும் எம்பெருமானாரைக் குறித்து "தந்தை நற்றாய தாரம் தனயர் பெருஞ் செல்வம் என்தனக்கு நீயே எதிராசா" என்றும், "தன்

புதல்வன் கூடாமல் தான்புசிக்கும் போகத்தால் இன புறுமோ தந்தைக் கெதிராசா, உன் புதல்வனன்றோ உரை யாய யான் ஆதலால் உன் போகநனறோ எனையொழிந்த நாள்" என்றும் உடையவர் தமககுப் பிதாவென அருளிச் செயகையாலும் அநத மாமுனிகளே தமது திருமேனி தளர்நது நோவு சாத்தியருளியபோது "தாய்மனம் நின் றிரங்கத தனியே நெடுமால் துணையாப் போயின வான மாமலை ஜீயருக்கு" என்று ஸ்ரீமுகம் அனுப்பியவற்றில் அவரைத் தமக்குப் புத்திரனாக அருளிச் செய்கையாலும் வானமாமலை எம்பெருமானும் மேலநிகழும் இவைகளைச் சிந்தித்தே அவவாறு திருநாமம் சாற்றினன் என்னக் குறையிலலை.

மேலும் ஸர்வஜ்ஞரான மாமுனிகளும் பெருமாள் நியோகததையும் அவதார ரஹஸ்யத்தையும் அறியுமவ ராகையாலேதான் கந்தாடையார் நூற்றிருபது திருநாமங் களும் மற்றும் தன்னை ஆச்ரயிக்க வந்திருந்த திருநாமங் களுமான அநேக சிஷ்யர்களின் கோஷ்டி நடுவே 'ஸமுநிஸ் ஸௌம்யஜாமாதா ஸர்வேஷாமேவ பச்யதாம்| ஸ்ரீஸகஸ்ய நிதேசேந சிசரியே தேசிகசரியா" என்கிற படியே தாம் ஆசார்ய லக்ஷ்மியால் மிகவும் உஜ்வலராய் விளங்காநிற்கச்செய்தே தமது பக்கத்தில் தமக்குப் பரிசர்யைசெயது போரும் வானமாமலை ஜீயரை அவர் களுக்குக காட்டியருளி, "இவா நமக்கு ப்ராண ஸுஹ்ருதது, நமக்கு உண்டான அதிசயங்கள் எல்லாம் இவருக்கும் உண் டாகவேணும் நமக்கு முதலியாண்டான் திருவம்சததில் ஸம்பநதமுணடானுப் போலே இவருக்கும் உண்டாக வேணும" என்று அருளிச்செயது இவரைத தமது ஆஸநத் திலே இருத்தித் தமககு அஸாதாரணமான திருக்கையி லாழ் வார்களையும் இவர் திருக்கைகளிலே ஸாதித்து, அப்பாச் சியாரணனை முதலானோர் சிலரை அணடையிலே உட் காரச்செய்து, அவர்களைக் காட்டி, "ஸமாச்ரயணம் ஸாதி

யும்" என்று நியமித்து, ஜீயரும் ஸங்கோசத்தாலே இருக்க, நமக்குப் பிரியமான இதைச் செய்ய வேணுமென்று நிர்ப்பந்தித்து அப்பாசசியாரண்ணா முதலானோருக்கு ஸமாச்ரயணம் ஸாதிக்கச் செய்ததும, பின்பு க்ரமேண வானமாமலை ஜீயருக்குத் தமக்குப்போலே அஷ்ட திக்கஜாசார்யர்களை ஏற்படுத்தியதும, மஹார்யரைக் கொண்டு இவருக்குத் தனியனிடுவித்ததும், அத்தனியனைத் தன் தனியனோடு அவிபக்தமாய் ப்ரபந்த ஆத்யந்தங்களிலே ஸேவிக்கும்படி நியமித்தருளியதுமாகும். வானமாமலை தெய்வநாயகனும் இதை அங்கீகரித்து, அவ்வண்ணமே நியமித்து அஸாதாரண ஸர்வாசார்யபதத்திலே இவரை முடிசூட்டி, "குன்றமெடுத்தானடி சேரிராமாநுசன் தாள் பிடித்தார்" என்கைக்கும் இவரை எல்லை நிலமாக்கி யருளினார்.

இப்படி இவரை ஆசார்ய புருஷர்கள் கோஷ்டியில் தம்முடைய ஸ்தானத்திலே இருந்தி ஸமாச்ரயணம் ஸாதிக்கும்படி நியமித்து, மற்றைய ஆசார்ய புருஷர்கள் இத்தகைய ஸத்காரம் தங்களுக்கு அலப்யமென்று பேசிக்கொள்ளும்படி ஸ்வஸ்தானத்தில அபிஷிக்தராக்குகைக்கு அடியென்? என்னில் ஸர்வேச்வரன் குருபரம்பரையை ஸங்கல்பித்தபோதே எம்பெருமானார் தொடங்கி ஆரோஹண க்ரமத்தில் தான எல்லைநிலமாய அவரோஹண க்ரமத்தில வானமாமலை ராமாநுஜ ஜீயா எல்லைநிலமாய இவ்வாறாக குருபரம்பராஹாரம உடையவருக்கு முன் ஒன்பது ஆசார்ய ரத்னங்களாலும பின் ஒன்பது ஆசார்யரத்னங்களாலும் விளங்குவதில், தலையில "பல தேவர்க்கோர் கீழ்க்கன்றாய" என்கிறபடியே ராமாநுஜனை தானும், நடுவில் "கலள கஃசித் பவிஷ்யதி" என்ற ராமாநுஜனும், கடையில் 'தச்சிஷ்யாக்ரஸரோபரோ விஜயதே ராமாநுஜாக்யோ முநி:" என்கிற ராமாநுஜனுமாய் நின்று, தலையிலும் நடுவிலும் கடையிலுமாக ராமாநுஜ ரத்ந த்ரயத்தாலே அலங்கரிக்க ஸங்கல்பித்ததை அடியொற்றியதாயிருக்கும்.

மேலும் ஸ்வப்நமுகமாக நம்பெருமாள் நியமனத்தைக் கொண்டு மாமுனிகளை ஆச்ரயிக்க எழுந்தருளியிருந்த கந்தாடையாருடையவும் மற்றும் பல சிஷ்யர்களுடையவும் கோஷ்டியிலே இப்படி இவரது அஸாதாரண ஆசார்யத்வத்தை மாமுனிகள் வெளியிட்டது தம்முடைய ஸம்பந்தம் பகவானுக்கு அபிமதமாய ஆசார்யகுலஜாதகர்க்கும் தேஜஸ்கரமாமாப்போலே தம்முடைய அம்சமேவானமாமலை ராமானுஜ ஜீயரானகையாலே பின்பும் ஆசார்யகுல ஜாதகர்க்கும் ஸந்ததி விச்சேதம், பால்யத்திலேயே பிதருவிச்சேதம் முதலியவற்ருல் ஸ்வஸம்பந்த விச்சேதம் நேரிட ப்ராப்தமான பொழுதும், இந்த முனிவரது ஞானஸந்ததி ஸமாச்ரயணமும் ஸ்வஸம்பந்த ஸம்பாதகமாய் தேஜஸ்கரமுமாய் இருக்கும் என்பதை அறிவிக்கைக்காகவே என்னத் தட்டில்லை.

மேலும் ஒரு ஸமயம் பெரிய பெருமாளும் மணவாள மாமுனிகளுடையவும் வரமங்கை முனிவருடையவும் ஐக்யத்தைக் காட்டத் திருவுள்ளம் பற்றியே இவ்விருவரும் திருமுன்பே நின்று மங்களாசாஸநம் செய்தருளும் காலத்திலே தம்மடியாரான அர்ச்சகர் ஒருவரை ஆவேசித்து பூபாலராயனிலிருக்கிற லக்ஷ்மீநாராயண விக்ரஹத்தை எழுந்தருளப்பண்ணி சிஷ்யரான வானமாமலை ஜீயரைத் தாமரைக்கண்களால் நோக்கியருளி, "ஜீயரே நாம் அரங்கநகரப்பன் உமதாசார்யருக்கும் உமக்குமாகத் திருவாராதனமாக வருகிறோம்" என்றருளிச் செய்து வானமாமலை ஜீயர் திருக்கைகளிலே ஸாதித்தருளினர் இதனால் பெரிய பெருமாளும் இவ்விருவர்களுடையவும் அபேதத்தை நன்கு காட்டியருளினராயிற்று.

நிற்க, முன்பு பாற்கடல் பாம்பணைமேல் பள்ளி கொண்ட பரமனைப் பிரமன் ஆரதித்து ஆராதிக்க அதன் பலமாக அவனுக்கு அப்பரமன் ஸ்ரீரங்கவிமானத்தைத்

தந்தருளினுன். திருவரங்கப் பெருநகருள் பொன்னி தெண் ணீர்த் திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொளளு மப்பர மன், தாமே உகநது தமது உகப்பின் பலனுய அரங்கநகர் அப்பனை க்ருபைசெயது தநதருளினுன். "சிஷ்யாசார்ய தநுத்வயீம்" என்கிறபடியே சிஷ்யாசார்ய க்ரமத்தாலே முனபு நாராயணனுகவும் நரனுகவும் சரிய:பதி அவதரித் தருளினுன் இபபொழுதோவெனில "ஸௌம்யோப்யந்தா முநிஸ் தசசிஷ்யா க்ரஸரோ பரோ விஜயதே ராமா னுஜாக்யோ முநி:" என்கிறபடியே "திருவநந்தாழ்வான் ஒருவர் ஆசார்யரான மணவாள மாமுனிகளாகவும் மற் ெருருவா அவரது சிஷ்யரில முதலில் எணணப்படும் வான மாமலை ராமானுஜ முநியாயும் அவதரித்து ப்ரகாசிக்கின்ருர்" என்றும் "ஸ்ரீராமானுஜ யோகிந: ப்ரதிநிதிர் வாநாதரி யோகீச்வர:" (இந்த வானமாமலை ஜீயர் எம்பெருமானு ருக்கு ப்ரதிநிதியாவர்) என்றும், "ரேகாயத்பதயோ:" (எந்த மணவாளமாமுனிகளின் பாத ரேகையோ இம்முனி வர்) எனறும் இவ்வாறு ஞாநாதிகரான மஹான்களும் இவ ரைப்பற்றி அருளிச் செய்துள்ளார்கள்.

இன்னமும் மாமுனிகள் வட தேசங்களில் எங்கும் திக் விஜயம் செய்து ராமானுஜ தர்சந ஸ்தாபநம் பண்ணி வரும் படி தனக்கு ப்ரதிநிதியாய் ஸ்ரீ வானமாமலை ஜீயரை நியமித் தருளியபடியாலும் மேலும் தமது அந்திமதசையிலே பிதா, தாயப்ராப்தமான தனத்தை புத்ரன் தூர தேசஸ்தனுனுலும் அவனிடம் சேர்ப்பிக்கும்படி அறிவிக்குமாபோலே, தமது ஆஜ்ஞையின்படி வட தேச யாத்ரைக்கு எழுந்தருளியிருக் கும் வானமாமலை ஜீயரிடம் தமது திருக்கையில் தரித்துள்ள த்ரிதண்டத்தில உபதணடத்தையும் ஓராண்வழி பரம்பரா ப்ராப்தமான திருவாழி மோதிரததையும் ஸ்வாசார்யரான திருவாயமொழிப பிளளையின் திருவடி நிலைகளையும் கொடுககவேணுமாக ஜீயா நாயனுரை நியமித்தும், அவ ரைத தமக்குப பெருக்க திருவத்யயனம் செயயச் சொல்ல

வேணுமாய் நியமித்தும் மாமுனிகள திருநாட்டுக் கெழுந்தருளினமையாலே, அவை வானமாமலை ராமாநுஜ ஜீயருக்கு ப்ராபதமாகி இபபொழுதும பிடிததார் பிடித்தாரைப்பற்றித தரித்து வருகையாலே இந்த வானமாமலை ராமாநுஜ ஜீயரே 'குனறமெடுததானடிசேர் .பற்றி'' என்கைக்கு எலலைநில மென்றும், எனவே இவருடைய ஆசாயத்வம் அநிதரஸாதாரணமென்றும் ப்ராசீனர்களான ஆசாய குலஜாதர்களும் அங்கீகரிதத தொன்ருகையாலே இனி இதைப்பற்றி பரக்கபபேசுவது ஆவச்யகமன்று.

மணவாளமாமுனிவன் பொன்னடியாம் செங்கமலப் போதுகள் என்பதும் இந்த வானமாமலை ஜீயரேயாவர் ஏனெனில்? திருமலையில் பெரிய ஜீயா ஸ்வபநததில ஸேவை ஸாதிததபோது பெரிய திருமேனியோடு சயநிததுக் கொணடிருநத அழகிய மணவாளப பெருமாள நாயனர் திருவடிப் பக்கத்தில் அஞ்ஜலிஹஸ்தராய விநீதராய ஸேவைஸாதிதத இவா திருநாமம் எனனென்று அருகே யிருநதவாகளைக் கேட்க அவர்கள் இவரை பொற்கால ஜீயரெனக் கூறியதும் தேசாந்திரத்திலிருந்து திருமலைக்கு எழுநதருளியிருநத சிலர் அதற்கநுகுணமாக அழகிய மணவாளப பெருமாள் நாயனர் தமது சிஷ்யரான வானமாமலை ஜீயரை ''பொன்னடிக்கால்ஜீயர் என அழைப்பர்'' எனக் கூறியதும், வானமாமலை ஜீயா ஸந்யஸிததுபபின் வந்து மாமுனிகளைத் தணடனிட்டபோது "ஸ்வாணபாத ஸமாகயோ ஸீதயாலிங்க்யாதரபூர்வகம்'' என்கிறபடியே ஸ்வர்ணபாதர் (பொனனடிக்கால்) ஜீயர் என்று அழைத்ததாகவும் தெரிவதால் மணவாளமாமுனிகளே தாமுகந்து இவருக்குச சாத்திய திருநாமமாகையாலே இவரே மாமுனிகளின பொன்னடியாம் செஙகமலபபோது எனறுரைக்கத் தட்டில்லை.

''பொனனடிக்கால ஜீயர்'' என்பதற்குப பலவாறு பொருள்கொள்ளலாம். பொன் - ஆசைப்படத் தகுந்த

அடி, அடிவைப்பையுடைய கால்திருவடிகளை உடைய ஜீயர் என்பது ஒன்று. அதாவது ஆச்ரிதர் பலரும் "மன்னிய செஞ்சொல மணவாளமாமுனி வணகமு-லுன்னிய கொண டவிராமானுச ிஞெண்பதங்கள தணணிய நெஞ்சில தரிகக வல்லாரவர் தம்பததனைச-சென்னியில சூடவல்லார் விண ணுளாரிலும் சீரியரே" என றவாறு.

அனறியே [1]"ரமயஜாமாத்ரு யோகீநதர ப்ரஸாத ப்ரதமாஸ்பதம" எனகிறபடியே மாமுனிகளின் திருவடி களில் ஆசரயிதத சிஷ்யர்களுள இவரே முதலாமவராகை யால் மாமுனிகளும் தமக்கேற்பட்ட சிஷய ஸம்ருததி முதலிய பெருமை இவர் கால நலததால் உணடானதாகக் கருத்தில கொண்டு பொற்கால ஜீயர் என இவரை அழைப் பர் எனவும் கூறுவா பெரியோர்.

அனறியிலே "பொன்னடி" என்று எண்ணிறநத சிஷ்யர்களுக்கு ஸ்ப்ருஹணீயமான (ஆசைப படும்படியான) திருவடிகளையுடையவர் என மாமுனிகளைக் கூறி, "கால்" என்று அவரது பரதம சிஷயரும அநதரஙகருமான வான மாமலை ஜீயரைக கூறுகிறது எமபெருமான திருவடிகளைச் சடகோபனெனறும், சடகோபன திருவடிகளை இராமா னுஜன் என்றும், இராமானுஜன திருவடிகளை முதலி யாணடானெனறும் அநதரங்கரான அடியார்களின் திரு நாமததாலேயே சேஷியின் திருவடிகளைப் பேசுவது உயர்ந் தோர்களின வழககலலவா? எனவே அணணன் முதலிய மாமுனிகளின அஷடதிக் கஜஙகளும் அவரை ஆசரயிப்ப தற்குப புருஷகார பூதராய ப்ரதான பூதரான அநதரங்கர் வானமாமலை ஜீயரே ஆகையாலும் ஸ்வர்ண பாதஸமாகயை யுள்ளதும அவருக்கே யாகையாலும் மாமுனிகளின் திருவடி வரமஙகை மாமுனியேயாவர். திருவேஙகட ஜீயா பட்டர்

---

1 रम्यजामातृयोगीन्द्र-प्रसादप्रथमास्पदम् ।

பிரான் ஜீயர் போன்ற அஷ்டதிக்கஜங்களுள் ஒருவருக்கும் "பொன்னடி" என்னும் திருநாமம் ஒருவராலும் சாற்றப் பட்டதாகத் தெரியாமையாலும், கீழக் கூறியபடி மாமுனிகள சிஷ்யாவதாரமாய அநதரங்கராகையாலும் வாநாத்ரி ஜீயரே மாமுனிகளின் பொன்னடி என அழைக்கத் தகுதியுள்ளவர் எனப பெரியோர்களின் திருவுள்ளமாகும். [1]"ரேகா யத்பத பத்மயோ:" என்றும், [2]"பாதரேகாமயம் ஸதா" என்றும் மணவாள மாமுனிகளுக்கு நிழலு மடி தாறுமாய்ப் பெரியோர்கள் கூறுவதும், "ஸ்வர்ணபாதஸமாக் யோஸி" என மாமுனிகளே கூறுவதும், "ஸ்வர்ணுதிபத ஸம்ஞக:" என்று திருவேங்கட ஜீயர் ஸ்வப்நத்திலே பொன்னடிக்கால்ஜீயர் இவர் என்ற லோகோக்தியும் தர்சித மாகையாலே இப்படி ப்ரஸித்தமான இவருடைய பெயரை யிட்டே மாமுனிகள் திருவடிகள வழங்கத் தகுதியுடையத் தாதலால் பொன்னடியாம் செஙகமலப் போது என்பது இந்த ராமானுஜ ஜீயரே ஆவார். செஙகமலப் போது (புஷ்பம்) போன்ற பொனனடியெனறு சப்தார்த்தம் இதததைய மாமுனிகளின் பொன்னடிககள வானமாமலை ராமானுஜ ஜீயரே யாவர்.

இவர் பால்யத்தில் உபநீதராய் உடனே திருவாய் மொழிப் பிள்ளை முன்னிலையில் அழகிய மணவாளப் பெரு மாள் நாயனார் திருவடிகளில் ஆச்ரயித்து ப்ரதம கடாக்ஷம் பெற்று, அவர் முகத்தாலேயே ஸகல சாஸ்த்ரங்களையும் அப்யஸித்து, ஆசார்யன் திருவடிகளில் ஏகாந்த கைங் கர்யத்தை உத்தேசித்து ஸநயஸித்தவராய் வானமாமலை ராமாநுஜ ஜீயர் என்று வானமாமலைப் பெருமாள் திருநாமம் சாற்றப் பெற்றவராய ஸ்வாசார்யன் திருவடிகளில் தண்டன் ஸமர்ப்பிக்க, ஸ்வாமியும் உகநது பொன்னடிக்கால

---

[1] रेखायत्पदपद्मयोः । [2] पादरेखामयं सदा ।

தைப் பரிபாலித்து [1]"வஸத ஸ்தஸ்ய கல்வேவ மார்த்தி ருநமஸ்தகோ பவத்| தாஸ்யத்ருஷ்ணாஸஸத்ருசீ மவஸ்தா மகமத் ததா||" என்கிறபடியே நித்யவிபூதியில் செல்ல வேண்டு மென்கிற ஆர்த்தி விஞ்சி தத்காலம் ஸமீபத்திலிராதே வய்வஹிதராய எழுந்தருளியிருந்த தம்முடைய திருவடிகளில் அந்தரங்கரான தெய்வநாயகஸ்வாமியை ஸ்தானத்தில் நியமிக்கும்படி ஸமீபவர்த்திகளான அடியார்களுக்கு நியமித்துத திருநாட்டுக் கெழுந்தருளினார்

இவர் சரமச்லோகம.—[2]"ஆரூடே கடகம் ப்ரபாபரிப்ருடே ஸம்வத்ஸரே விக்ரமே தர்சே ப்ராபதபுநர்வஸௌ ஜஷவரே ஸாரேகுரோர் வாஸரே| ஸ்ரீவாநாத்ரி முநீச்வராங்க்ரிமுகுட ஸ்ரீவெங்கடார்யோ மஹாந் ஸ்ரீவாநாசல யோகிராட் நிஜகுரு ஸ்ரீபாதஸேவா மகாத||

ஜீயர் திருவடிகளே சரணம

அநந்தரம 11-வது பெரிய தெய்வநாயக ஸ்வாமி —இவர் [3]"ஸம்பூய ஸர்வே சிஷ்யாஸ்து தேவநாயகயோகிநம்| ஸம்ஸ்தாநே ஸ்தாப்யாமாஸு ததப்ரஸாதைகபாஜநம்|| என்கிறபடியே திருவேங்கட ராமானுஜ ஸ்வாமி திருநாட்டுக்கு எழுந்தருளினவுடன் அடியார்களெல்லாருமாக ஸ்வாமிநிய

---

1 वसत स्तस्य खल्वेव मार्ति रुन्मस्तकोऽभवत् ।
दास्यतृष्णा सुसदृशी मवस्था मगम त्तदा ॥

2 आरूढे कटकं प्रभापरिबृढे संवत्सरे विक्रमे
दर्शे प्राप्तपुनर्वसौ झषवरे सारे गुरोर्वासरे ।
श्रीवानाद्रि मुनीश्वराङ्घ्रिमुकुटः श्रीवेङ्कटार्यो महान्
श्रीवानाचल योगिरा ण्णिजगुरु-श्रीपादसेवा मगात् ॥

3 संभूय सर्वे शिष्यास्तु देवनायकयोगिनम् ।
संस्थाने स्थापयामासु स्तत्प्रसादैकभाजनम् ॥

மித்தபடியே தெய்வநாயகஜீயரை அழைப்பித்து ஸ்வாமீ சரம விக்ரஹத்தின் முன்பாகவே ஸம்ஸ்தானத்தை அலங் கரிக்கும்படி ப்ரார்த்திக்க ஸ்வாமி கைங்கர்யம் நடக்கும்படி அவர் ஸம்ஸ்தாநத்தில் அபிஷிக்தரானார்.

இவர் திருநக்ஷத்ரத் தனியன — [1]"துலார்த்ரா தார ஸம்பூதம் நந்தநாஹ்வய வத்ஸரே| தேவேசாஹ்வய - வாநாத்ரி முநிம் குணநிதிம் ச்ரயே|| வந்தே தேவேசநாமாநம் துலார்த்ரா தார ஸம்பவம்| கல்யாணகுணவாராசிம் ககநாத்ரிமுநீச் வரம்||

வைபவத் தனியன் —[2]"ஸ்ரீமத்வாநாத்ரி - யோகீந்த்ர பதபங்கஜ-ஸம்ச்ரயம்| ஸ்ரீராமானுஜயோகீந்த்ரம் வந்தே வாத்ஸல்யவாரிதிம் ||

வாழித திருநாமம

பூவிருநத செங்கமலப் பொன்னடியோன் வாழியே
புகழுத திருவேங்கடமுனியைப் போற்றிசெய்வோன் வாழியே
காவிருந்த சங்கநிதிக் காருணிகன் வாழியே
காரிமாற னிந்தமிழின் கருததுரைப்போன் வாழியே
மாவிருந்த வரமுனியை வணஙகுமவன் வாழியே
வண்பெரும்பூதூர்முனிதாள மனத்துவைப்போன் வாழியே
தேவிருந்த வரமங்கை சிறக்கவநதோன் வாழியே
தெய்வநாயகமுனிவன் திகழ்தலததில் வாழியே.

---

1 तुलार्द्रा तारसंभूतं नन्दनाह्वय वत्सरे ।
देवेशाह्वय-वानाद्रिमुनिं गुणनिधिं श्रये ॥
वन्दे देवेशनामानं तुलार्द्रा-तारसंभवम् ।
कल्याणगुणवाराशिं गगनाद्रि मुनीश्वरम् ॥

2 श्रीमद्वानाद्रि योगीन्द्र-पदपङ्कजसंश्रयम् ।
श्रीरामानुजयोगीन्द्रं वन्दे वात्सल्यवारिधिम् ।

வாழி யுயாதெய்வ நாயகனும் மாமுனிவன்
வாழியவன் செம்மொழிசேர் செம்பவளம்—வாழியே
எநதைதிரு வேஙகட முனிவனரு ளால்மாறன்
செந்தமிழி னீடுரைக்குஞ சீர்.

இவர் செயதருளிய கைஙகர்ய வைபவஙகள் :—இவர் ஸம்ஸ்தானத்தில் அபிஷிக்தராய தம்முடைய ஆசார்யரான திருவேங்கட ராமாநுஜஸ்வாமியி னுடைய சரமகைங்கர்யங் களை எல்லாம் செயதருளிப் பெருக்க திருவதயயநமும் நடத்தி யருளி, அநந்தரம் பூர்வீகாசரணைகளில ஒனறும் தப்பாதபடி நடத்திக்கொண்டு [1]' பத்யு ச்ரிய ப்ரீதிமவாப நித்யம் " என்று ச்ரீவரமங்கை தெய்வநாயகன் திருவுளளத்துக்குப் பாங்காக எழுந்தருளியிருநது பஹுசிஷ்யாபிவ்ருத்தியுடன் காலக்ஷேபபரராய் எழுநதருளியிருந்து கைங்கர்ய குதூஹலி யாய [2]"நாநாவித த்ருமாராமை ரம்யாராமம் விநிர்மமே| பலைஸ் ஸம்ருதத மாஸ்வாத்யைஸ் ஸுகநதைர் க்ராண தர்ப்பணம்|" என்றித்யாதிப்படியே அத்யநதம் பரிமளவத் தான புஷபங்களையும் அதி ருசியுள்ளதான பழங்களையும் உடையதான சம்பக புந்நாகாசோக கிம்சுக பலாச பாடலீ பாரிஜாதாதிகளான புஷ்பவ்ருக்ஷங்களாலும் பலகதலிச் சோலைகளாலும் ஜம்பீர ஆமலக பநஸ க்ரமுக ஆம்ர ஆம்ல நாளிகேர நாரங்காதி பலவ்ருக்ஷங்களாலும் அதிலே சுகங்கள் மயில்கள்எலலாம் காதுக்கின்பமாக சப்திக்க நாநா புஷ்பங்களாலே சூழப்பட்டு த்ருஷ்டிப்ரியமாயும் ப்ருங்க ஜாதிகளெல்லாம் மதுபானம பணணும்படியாயும் பஹுரம்யமாய ஒரு ஆராமததைக்கல்பித்து அதிலே [3]"வர

---

[1] पत्युःश्रियः प्रीति मवाप नित्यम् ।

[2] नानाविध द्रुमारामै रम्यारामं विनिर्ममे ।
फलैस्समृद्ध मास्वाद्यै स्सुगन्धै घ्रांणतर्पणम् ॥

[3] वरमङ्गासमुद्राख्यां सरसी मसृजन्मुनिः ।

மங்காஸமுத்ராக்யாம் ஸரஸீமஸ்ருஜந முநி ||" என்கிற படியே அநேகபக்ஷிஜாதகங்களுக்கும் கலஹார பத்ம குமுத நீலோத்பலாதி புஷ்பஜாதிகளுக்கும் ஹம்ஸ ஸாரஸ காரண்டவ சக்ரவாகாதி பக்ஷிஜாதிகளுக்கும் தாரகமாயிருக்கும் படி வெகுருசியுள்ள ஜலத்தோடு வரமங்காஸமுத்ரமென்று ஒரு ஸரஸ்ஸைக் கல்பித்து அதன் பரிஸரத்திலே [1]"மஹாயாமபரீணாஹம் மண்டபம் சைஷ நிர்மமே| ச்ரமாபஹம் ரமாநேது துங்கமங்களமஞ்ஜுளம்|| என்கிறபடியே ச்ரிய:பதியான தெய்வநாயகப் பெருமாளுக்கு யாத்ரோத்ஸவங்களிலே ச்ரமாபநோதநார்த்தமாக விசாலமாகவும் உந்நதமாகவும் ஒரு திருமண்டபம் கட்டியருளினார் [2]"புஷ்பகஞ்சாபி நிர்மாய நிர்மலம் கநகப்ரபம்|| ராஜிதம் ராஜதைர் தண்டைஸ் ஸூர்யபட்டநிகேதநை ||" என்கிறபடியே ஸ்வர்ணமயமாயும் ரஜதமயமான ஸ்தம்பங்களையுடையதாயும் அதிரம்யமாயும் தெய்வநாயகனுக்கு ஒரு புஷ்பகமும் செய்வித்தருளினார். மேலும் ஸந்நிதி திருவாராதனத்துக்கு பாத்ரங்களெல்லாம் ரஜதத்தாலும் ஸுவர்ணத்தாலும் செயதருளி சுத்தஸுவர்ணத்தாலே தெய்வநாயகனுக்கு அபேத்ய கவசமும் செயதருளினார். பின்னும் ச்ரேஷ்டங்களான ரத்னங்களாலே தெயவநாயகனுககுக் கிரீடமும் கேயூராங்கத கண்டிகாதிகளும் ஸமர்ப்பித்து நாச்சியாருக்கு தாடங்க குண்டலங்களும் ஸுவர்ணத்தில் ரதனகசிதமாய் ஜடையும் அரைச்சலங்கைகளும் பண்ணி ஸமர்ப்பித்தருளினார். பின்னும் [3]"பாணிபாதசிர கண்டகர்ணசக்ராம்புஜாநபி| தீப்

---

1 महायामपरीणाहं मण्डप श्चैष निर्ममे ।
श्रमापहं रामानेतु स्तुङ्गमङ्गलं मञ्जुलम् ॥

2 पुष्पकञ्च विनिर्माय निर्मलं कनकप्रभम् ॥
राजितं राजतै र्दण्डै स्सूर्यपट्टनिकेतनैः ॥

3 पाणिपादशिरः कण्ठ कर्ण चक्रांबुजानपि ।
दीप्रांस्तोदाद्रिनाथस्य कृत्वा हैमान दान्मुनिः ॥

ராம் ஸ்தோதாதரிநாதஸ்ய க்ருத்வா ஹைமாந தாந்முநி ||
என்கிறபடியே வானமாமலைப் பெருமாளுக்கு திருக்கைகள் திருவடிகள் திருமுடிகள் இவை எல்லாவற்றையுமே ஸுவர்ணத்தாலே கவசமாக்கிச் சாத்தியருளினார். மேலும் கர்ணபத்ரங்களும கண்டஸரமும் திருவாழி திருச்சங்குகளும் ஸுவர்ணததாலே கவசமாகப பண்ணிச் சாத்தியருளினார். இத்துடன் நாநாவிதங்களாய உத்தமமான பட்டு வஸ்தரஙகளும் பீதாம்பரங்களும் விசேஷமாக ஸமர்பபித்து தெய்வநாயகன் வானமாமலைப்பெருமாள் ஸ்ரீவரமங்கை இவர்களுக்கு நித்யமாக எழுந்தருளியிருக்குமிடததில் பஞ்சவர்ணாலங்க்ருதமான மேல்கட்டிகளும் மஞ்சங்களும் ஹம்ஸதூலிகாபூர்ணமான அணைகளும் மெத்தைகளும் அவற்றுக்கு உத்தமமான மேல்விரிப்புக்களும் ஸமர்ப்பிதத "[1]வாஹநம் சதபதராட்யம் ப்ரபாபோகீந்த்ர பாஸ்வரம்| சாமரக்ராஹிணீயுக்தம் சந்த்ரமணடலவாஹநம்" எனகிறபடியே அநேகதளங்களாலே பூர்ணமாயும் ப்ரபையினாலும் போகீந்தரர்களாலும் சாமரக்ராஹிணிகளாலும் அலங்கரிககபபெற்ற சநதரமண்டலவாஹநம் செயது ஸமர்பபித்தும், தருணீத்வய ஸம்வாஹிதமான ஆளும்பல்லக்கையும் ஸமர்ப்பித்தும் கமலாகாரமாயும் ரம்யமாயுமிருக்கிற ஒருரதத்தைபபண்ணியும் தெய்வநாயகனுக்கு ஸமாப்பித்தருளினார். பின்னும் சதசலாகமாய ருசிரமான தண்டத்தையுடைய ஒரு சத்ரத்தையும் உத்தமமான சாமரத்வயத்தையும் அவருக்கு ஸமர்ப்பித்தருளினா.

அநந்தரம் "[2]மடே வாபீஸமீபேது ம்ருத்ஸ்நா தாநோத்ஸவாயச| தாருபி சாருபி சக்ரே ஸேநாநீமண்டபம்

---

[1] वाहनं शतपत्राढ्यं प्रभाभोगीन्द्रभास्वरम् ।
चामरग्राहिणीयुक्तं चन्द्रमण्डलवाहनम् ॥

[2] मठे वापीसमीपेतु मृत्स्नादानोत्सवायच ।
दारुभिश्चारुभि श्चक्रे सेनानी-मण्डपं मुनिः ॥

முநி ||'' என்கிறபடியே ம்ருதஸங்க்ரஹணேதஸவார்தத மாக மடததில வாபீஸமீபத்தில் தாருமயமாய ஸேநாகீ மணடபமென்று ஒரு திருமண்டபம் கல்பிதத்ருளினர் பின் னும் ஸந்நிதிக்குள்ளே அத்யயநோதஸவார்த்தமாக அதி விசாலமாயும ரமயமாயும ஒரு திருமண்டபம் கல்பிததருளி னா மேலும் [1]''ஆதாய தாநதம் சதுரந்தயாந த்வயம் முநீநத்ரஸ்ஸ ரமாபதேர் ததௌ| ஏகம் ஸமாருஹய ஜகத பதி ஸ்வயம் ஸம்மாநபூர்வம் முநயே ந்யதாதிசத்||'' என்கிற படியே தநதமயமான இரணடுதிருப்பல்லக்குச் செய்தருளி தெய்வநாயகனுக்கு ஸமர்ப்பிக்க, தெய்வநாயகனும் தாம் தமக்கொரு திருபபல்லக்கைத் திருவுள்ளம்பற்றி மற்ரெரு திருப்பலலக்கை தமக்குஅபிமதரான ஜீயருக்கு ஸம்மான மாக ஸாதித்து க்ருபைசெயதருளினர். இப்படி இவர் முப் பத்திரெண்டு ஸம்வத்ஸரம் ஸம்ஸ்தானத்தில் மஹாஸாத் விகராய் எழுந்தருளியிருந்த காலத்திலே இவர்செயதருளின கைங்கர்யஙகளையெல்லாம் சொல்லவென்ருல் ஆயிரம் பைந் தலைய அநநதனுகவேணும் அநநதரம் [2] '' ரங்கேச வாநாதரீ முநீந்த்ரபாத கஞ்ஜாத ப்ருஙகாதிப வேங்கடார்ய | தேவேச வாநாத்ரி முநிப்ரஸாதாத் வேதாநத வேத்தாச யதிதவ மாப||'' எனகிறபடியே ரங்கப்பஸ்வாமி திருவடிகளி லாச்ர யிதது இந்த தெயவநாயகஸ்வாமி ஸநநிதியில் மநதர மந்த ரார்த்த பகவதவிஷய காலக்ஷேபஙகளும் செய்தருளி திரு வடிகளி லந்தரங்கரா யிருக்கிற வெங்கடாசார்யர் என்கிற ஒருவரை தெய்வநாயக ஸ்வாமியும் அவருடைய ஜ்ஞான

---

1 आदाय दान्तं चतुरन्तयानद्वयं मुनीन्द्रस्स रमापते र्ददौ । एकं समारुह्य जगत्पति स्स्वयं सम्मानपूर्वम्मुनये न्यदादिशत् ॥

2 रङ्गेशवानाद्रि-मुनीन्द्रपाद-कञ्जातभृङ्गाधिप-वेङ्कटार्यः । देवेश-वानाद्रिमुनि-प्रसादा द्वेदान्तवेत्ताच यतित्व माप ॥

பக்தி வைராக்யாதிகளைக் கண்டு "ஆம் முதல்வனிவன்" என்ற ஆளவந்தாரைப்போலே ஸ்தானத்துக்காவர் இவர் என்று கடாக்ஷித்தருளி பூர்வாங்கமாக இவருக்கு ஸந்யாஸ தானத்தைச் செய்தருளிக் கடாக்ஷித்து திருவேங்கட ஜீயர் என்று திருநாமத்தையும் சாத்தியருளினர். ' இந்தத் திரு வேங்கட ஜீயரும் ஒருக்கால் ஆழ்வார ஸேவார்த்தமாக ஸ்வாமி நியமனம் பெற்றுப் புறப்பட்டு திருநகரி ஏற வெழுந்தருளி ஆழ்வாரை மங்களாசாஸநம் செய்தருளி நிற்க [1]" தீர்த்தம்ச துளஸீம் சேஷாம் லக்ஷமணக்யாம்ச பாதுகாம்| தத்வா ரஜதபாத்ரஸ்த மாதூகர மநுத்தமம்| ஸந்துஷ்ட ஸ்ரீ சடாராதி ரத்ரைவாஸ்வேதி சாஸநம்| அகரோத்யமிந ஸ்ஸோபி ததைவேதி ததோப்ரவீத்||" என் கிறபடியே ஆழவாரும் இவருக்கு தீர்த்தம் திருமாலை திருப் பரிவட்டம் ராமானுஜனையும் ஸாதிதது ரஜதபாத்ரத்தில் மாதூகரம் ப்ரஸாதிதது திருப்பவளச் சோதிவாய்திறந்து ஜீயரை அழைத்தருளி நீர் இங்கே நம்முடைய ஸந்நிதியில் காலக்ஷேபபரராய் இருமென்று நியமித்தருள ஜீயரும் ஓமறைந்து அங்கே காலக்ஷேபபரராய் எழுந்தருளியிருந்தார். இப்படிச சிலகாலம் சென்றவாறே வானமாமலை தெய்வ நாயக ராமானுஜ ஜீயர் ஆழ்வாரை மஙகளா சாஸநம் செய் தருளிப் பெரிய பெருமாளை மங்களாசாஸநம் செய்வதில் திரு வுள்ளமாய் திருவேங்கட ஜீயரைக் குறித்து ஜீயரே நாம் கோயிலுக்குப் போகிறோம் நீரும் வாரும் என்று அழைத்துக் கொணடு எழுந்தருளி பெரிய பெருமாளை மங்களாசாஸநம் செய்தருளி அஙகுள்ள ப்ரபுவாலே ஆதரிக்கப்பட்டவராய்

---

[1] तीर्थंच तुलसीं तेषां लक्ष्मणाख्यांच पादुकां ।
दत्त्वा रजतपात्रस्थ-माधूकर मनुत्तमम् ॥
सन्तुष्ट श्श्रीशठाराति रत्रैवास्वेति शासनम् ।
अकरोद्यमिन स्सोपि तथैवेति ततो ब्रवीत् ॥

தம்முடைய மடத்திலே எழுந்தருளியிருக்க திருவேங்கட ஜீயரும் பெரிய பெருமாள் ஸந்நிதியிலே ஆழ்வாருக்கு மஹாரதம் நட க்கும்படி க்ருபை செய்தருள வேணுமென்று ப்ரார்த்திக்க, இதைக் கேட்ட பாணடய ராஜாவும கோயி லில் இருககிற திருவேங்கட ஜீயர் முகமாக தம்முடைய ப்ருத்யர்களுக் கறிவித்து பஹுதரவயங்களை ஆழவாருடைய ரதார்த்தமாகக கொடுக்குமபடி உத்தரவு அனுப்ப, அப் படியே அநத ராஜப்ருத்யாகளும் அநத ஸ்ரீரஙகம் திருவேங் கட ஜீயரிடததிலே பஹுத்ரவ்யங்களைக் கொடுத்துவிட, ஜீயரும் அந்த தநத்தைக் கொண்டுவந்து வானமாமலை திரு வேங்கட ஜீயரிடத்திலே சோப்பித்தார். பிறகு [1] "ஸோபி வாநாத்ரி யோகீந்த்ரம் பரணம்ய ஸஹஸா முதா| தஸ்ய சாநுக்ரஹம் ப்ராப்ய ப்ரதஸ்தே குருகாம் ப்ரதி||" என்றி த்யாதிப்படியே அநதத் திருவேங்கட ஜீயரும் வானமாமலை ஜீயரை தணடம் ஸமர்ப்பித்து ஆழவாா திருததேருககு நிய மனமபெற்றுக்கொண்டு பஹுதனத்துடன் திருநகரி ஏற எழுநதருளி ஆழவாரை தணடம் ஸமர்ப்பிதது திருமுன்பே சென்று பெரிய பெருமாள நியமனத்தின்படியே திருத்தேர் கொணடருளத் திருவுள்ளம் பற்றவேணுமெனறு பராாத் திதது்க்கொண்டு நியமனம் பெற்றுப புறப்பட்டு தார்வர்த்த மாக கேரள ராஜாவுக்கு அறிவிக்க அவரும் ஆழவார் மஹா ரதாாத்தமாக தாருக்களைக் கொடுத்தனுப்ப ஜீயரும் பெற் றுககொணடு திருநகரி ஏற எழுநதருளி ஸாவாலங்கார பூர்ணமாக விதிப்படியே மஹாரததனைக் கல்பிதது முடித்து ஸ்வாசார்யரான வானமாமலை ஜீயரை ரதோத்ஸவார்தத மாக எழுந்தருளப்பண்ணி ஸ்வாமியை முனனிட்டு ஆழ் வார் திருததோ கொணடருளபபணணி அவபருத மான

---

[1] सोपि वानाद्रियोगीन्द्रं प्रणम्य सहसा मुदा ।
तस्यचानुग्रहं प्राप्य प्रतस्थे कुरुकांप्रति ॥

வாறே திருவேங்கட ஜீயரும் [1] "தத ப்ரதஸ்தே யோகீந்த்ரோ ரங்கதாம்நே சடத்விஷ:| ரதோத்ஸவ: ஸுநிஷ்பந்ந: இத்யாக்யாதும் த்வராயுத:| எனகிறபடியே ஆழ்வார் திருத்தேர் வலங்கொண்டருளின விஷயத்தைப் பெரிய பெருமாள் ஸந்நிதியிலே விண்ணப்பம் செய்கைக்காகப் புறப்பட்டு கோயிலேற எழுந்தருளி பெரிய பெருமாள திருமுன்பே சென்று ஆழ்வார் மஹாரதம் கொண்டருளின ஸந்தோஷத்தை விண்ணப்பம் செய்து சிலநாள் அங்கேயே எழுந்தருளியிருந்தார்

வானமாமலையிலே வானமாமலை ஜீயரும் [2] "கால்யமுத்தாய யோகீந்த்ரஸ் ஸ்வாநுஷ்டாநாதநந்தரம்| ப்ருத்யேப்யோ ப்ருதகம் தத்வா ஸ்நாத்வா பயஞ்ஜநபூர்வகம்|| [3] "ஸ்வாராத்ய ரங்கநாதாக்ய ஹரேராராதநாதநு|அநுயாகம் யதாபூர்வம் க்ருத்வாகாத் பரமம்பதம்|| என்கிறபடியே ப்ராத காலத்திலே எழுந்திருந்து நித்யகாமாநுஷ்டாநங்களை யதாக்ரமமாக முடித்துக்கொண்டு "அபிகமய நிஜம் ப்ரபும்" எனகிறபடியே தம்முடைய திருவாராதன எம்பெருமான் திருமுனபே சென்று திருவடிவிளக்கி க்ரமேண ஸ்ரீபாததீர்த்தம் ஸ்வீகரித்து அடியார்களுக்கும் ப்ரஸாதித்து மங்களாசாஸந காலக்ஷேபங்களானவாறே அரங்கநகரப்பன் திருவாராதனம் பண்ணியருளி ததீயாராதநாநந்தரம் எம்பெருமான திருமுன்பே ஸ்வாசார்யர் திருவடிகளை தயா

---

[1] "ततः प्रतस्थे योगीन्द्रो रङ्गधाम्ने शठद्विषः।
रथोत्सव-स्सुनिष्पन्न इत्याख्यातुं त्वरायुतः॥

[2] काल्यमुत्थाय योगीन्द्र स्स्वानुष्ठाना दनन्तरं।
भृत्येभ्यो भृतकं दत्वा स्नात्वा भ्यञ्जनपूर्वकम्॥

[3] स्वाराध्य रङ्गनाथाख्य हरेराराधनादनु।
अनुयागं यथापूर्वं कृत्वाऽगात्परमंपदम्॥

ணித்துக்கொண்டு ஸுகாஸீநராயிருக்க அப்போது நித்ய விபூதிநாதனும் ஸ்ரீவரமங்கையோ நித்யவிபூதியோ என்னும் படி தர்சனம் நிர்வஹித்துச் செய்தருளின கைங்கர்யத்திலே உகந்து ப்ரீத்யதிசயத்தாலே விநதைசிறுவன் மேல்கொண் டெழுந்தருளி முகங்காட்ட ஜீயரும் அப்ராக்ருத திவ்யமங் கள விக்ரஹத்தை அனுபவித்து ஸமாதியாகவிருந்து ஸுஷும்நா நாடிமார்க்கமாய் சிர கபாலம் பேதிக்க ஈச்வர னும் இவரை மடியிலேவைத்து எழுந்தருளப்பண்ண திரு நாட்டுக்கெழுந்தருளினார்.

இவர் சரமச்லோகமிருக்கும்படி [1] அப்தே பரீதாப்யபிதே மதௌச மாஸே ஜலர்க்ஷ ஹ்யஸிதே சபக்ஷே | ஷஷ்ட்யமா காத ஸௌம்யதிநே ஸுரேச - வாநாத்ரியோகீ குருபாத பத்மம்||

ஜீயர் திருவடிகளே சரணம்

அநந்தரம் பன்னிரண்டாவது சின்ன திருவேங்கட ஸ்வாமி — இவர் ஸ்தானத்துக்கு எழுந்தருளின க்ரமம் [2] "ததோவாநாத்ரியோகீந்தரோ தேவேச பதமந்வகாத்| பத் ரிகா மாகதாம் த்ருஷ்ட்வா க்லிஷ்ட. ஸ்ரீசைலயோகிராட்|| என்றித்யாதிபடியே தெய்வநாயக ராமானுஜஜீயர் திரு நாட்டுக்கெழுந்தருளின ஸ்ரீமுகம் கோயிலில் எழுந்தருளி யிருக்கும் திருவேங்கடஜீயருக்கு அனுப்ப அவரும் திரு முகத்தை ஸேவித்து ஆசார்யவிச்லேஷ துக்கிதராய்ப் போரக்லேசித்துத் தேறி ஸ்ரீசூர்ணபரிபாலனாதிகளைச் செய் தருளி ஸ்வாமி கைங்கர்யார்த்தமாக வானமாமலைக்கு

---

[1] अब्दे परि[illegible]ताप्याभिधे मधौच मासे जलर्क्षे ह्यसितेच पक्षे ।
षष्ठ्यामगा त्सौम्यदिने सुरेश-वानाद्रियोगी गुरुपादपद्मं ॥

[2] ततो [illegible] देवशपदमन्वगा[illegible] ।
पत्रिका मागतां दृष्ट्वा क्लिष्ट श्श्रीशैल[illegible] ॥

எழுந்தருளத் திருவுள்ளமாய் பெரிய பெமாருள் நியமநம் பெறுகைக்காக திருமுன்பேநின்று விணணப்பம் செய்யப் பெருமாளும் [1]"ரதநிர்மாண ஸநதுஷ்டோ ரங்கேச ஸ்தஸ்யமூர்த்தநி| ததோ வாநாத்ரியோகீதி ப்ரோச்ய சேஷாம் பபநத ஸ"|| என்றித்யாதிப்படியே அத்யந்தம் ஹ்ருஷ்டராய இவருககுத் தீர்ததம் ஸாதித்துத் திருமாலை திருபபரிவட்டம் முதலியவைகளையும் ஸாதிதது வானமாமலை ரமானுஜஜீயர் என்று அருளப்பாடிட்டருளி சடகோபனையும ஸாதிதது அனுப்பியருள ஜீயரும் அததேசத்து ப்ரபுவாலே ஆதரிககப்பட்டவராய்ப புறபபட்டு வானமாமலையேற எழுநதருள அங்கே சீவரமங்கை தெய்வநாயகனும் ஜீயரெழுந்தருளுவதைக்கேட்டு [2]"ஆநீதம் தேவநாதஸ்ய திவ்யம் சேஷாதிகம் தத| அர்ச்சகேநாத யோகீந்த்ர ப்ரணம்ய சிரஸா ததெள" என்றித்யாதிப்படியே ஜீயரை எதிர்கொண்டழைக்கத் திருவுளளமாய அடியார்களை அருளப்பாடிட்டு அழைக்க நியமிக்க அவர்களுமப்படியே திருமாலை திருப்பரிவட்டம் ப்ரஸாதங்களும் கொண்டு ஜீயரை எதிர்கொணடு சத்ரசாமர வாத்யங்களள உடன் செல்ல ஜீயரும் ஸாஷடாங்கமாக தண்டன்ஸமாப்பிதது நிற்க அடியார்களும திருமாலை திருபபரிவட்டம் அபயஹஸ்தம் ப்ரஸாதங்களையும் ப்ரஸாதித்து ஜீயரைப் பெருமாள் நியமனப் படியே ஸந்நிதிக்கு எழுந்தருளப் பணணிக்கொண்டுபோக கோபுரதவாரததிலே செனறவாறே [3]"ஸ்ரீவேங்கடயதி.

---

[1] रथनिर्माणसन्तुष्टो रङ्गेशस्तस्यमूर्धनि ।
ततो वानाद्रियोगीति प्रोच्य शेषां बबन्धसः ॥

[2] आनीतं देवनाथस्य दिव्यं शेषादिकं ततः ।
अर्चकेनाथ योगीन्द्रः प्रणम्य शिरसाऽऽ ददे ॥

[3] श्रीवेङ्कटयतिः प्राप्यगोपुरद्वारमादरात् ।
ननाम शठकोपन्तं पुरतोपागतं हरेः ॥

ப்ராப்ய கோபுரத்வார மாதராத்| நாம சடகோபம் தம் புரதோபாகதம் ஹரே | என்கிறபடியே இவரை எதிர் கொண்டழைக்க ஸ்ரீசடகோபன் எழுந்தருள ஜீயரும் ஸாஷ் டாங்கமாக தண்டம் ஸமர்ப்பித்து சிரஸா வஹித்துக் கொண்டு க்ரமேண உள்ளே சென்று தெய்வநாயகனை மங் களாசாஸநம் செய்தருள தெய்வநாயகனும் தமக்கபிமத ரான தெய்வநாயக ஸ்வாமி, ஸம்ஸ்தானத்திற்குரியரென்று உகந்த விஷயமாகையாலே தீர்த்தம் திருமாலை திருப்பரிவட் டம் ஸாதித்து வானமாமலை ராமானுஜ ஜீயரென்று அருளப் பாடிட்டருளி சடகோபனையும் ப்ரஸாதித்து ப்ரஸாதங் களையும் க்ருபைசெய்து நம் வானமாமலைமடத்திலே நித்ய வாஸமாயிருந்து ஸந்நிதி ஸ்ரீகார்யங்களையும் தர்சனத்தையும் நிர்வஹித்துக்கொண்டு போரும் என்று அர்ச்சகமுகேந நிய மித்து அடியார்களை அருளப்பாடிட்டு அழைத்து நம் வான மாமலை ஜீயரை நம்முடைய ஸகலவிருதுகளுடன் மடத் திலே விட்டுவாருங்கோள என்று நியமித்தருள அவர்களும் அப்படியே எழுந்தருளப்பண்ணி ஜீயராலே ஸம்மாநிதராய் யதாகதம் எழுந்தருளினார்கள்.

இவர் திருநக்ஷத்ரத் தனியன் —[1]விபவே கர்க்கடே மாஸி குரும் ம்ருகசிரோபவம்| குணாம்போதிம் வாநசைல வெங்கடாக்யமுநிம் பஜே|ம்ருக சீர்ஷஸமுத்பூதம் கார்க்கடே வேங்கடாஹ்வயம்| ஸ்ரீமத்வாந மஹாசைல முநிநாயக மாச்ரயே||''

---

[1] विभवे कर्कटे मासि गुरुं मृगशिरोभवम् ।
गुणांबोधिं वानशैल-वेङ्कटाख्य-मुनिं भजे ॥
मृगशीर्षे समुद्भूतं कर्कटे वेङ्कटाह्वयः ।
श्रीमद्वान महाशैल-मुनिनायक-माश्रये ॥

இவர் வைபவத தனியன — [1]"வாநாசல யதீந்த்ராங்க்ரி-ஸரஸீருஹ ஷட்பதம்| வேதாநதவாஸித-ஸ்வாந்தம் ராமாநுஜ முநிம் பஜே||

**வாழித் திருநாமம**

திருவிருந்த மலர்க்கமலச் சேவடிகள் வாழியே
திருவாயமொழிப் பொருளைத் தோநதுரைப்போன் வாழியே
மருவலரும் வரமங்கை வாழவந்தோன் வாழியே
வாழ்தெய்வ நாயகன்தன மலர்ப்பதத்தோன் வாழியே
இருள்கடியும பெரியோர்களேத்து மவன வாழியே
எதிராசன் கலைப்பொருளை இனிதுரைப்போன் வாழியே
திருமாலி னுருவமெனச் சிறந்துதித்தோன் வாழியே
திருவேங்கடமுனிவன் திருவடிகள் வாழியே.

வாழி திருவேங் கடமுனிவன் மாமலர்த்தாள்
வாழியவன் செம்பவள வாய்மொழிகள—வாழியே
எநதை உயர்தெய்வ நாயகன்தன் னின்னருளால்
செந்தமிழி னீடுரைக்குஞ் சீர்

**இவர் செயதருளிய கைஙகாய வைபவஙகள்** —இவர் ஸ்வாசார்யரான தெயவநாயகஸ்வாமி கைங்கர்யஙகளை யெலலாம் செவ்வனே செய்தருளி ஸம்வத்ஸராநத தீர்த்ததத்தையும் பெருக்கச்செய்தருளி அநந்தரம [2]"புக்த்யை ச்ரீஸூக்த்ய பிஜ்ஞாநாம் பரகாலாபிதம் த்ருடம்| த்ருஷத்பிர் மண்டபம்

---

[1] वानाचल-यतीन्द्राङ्घ्रि-सरसीरुह षट्पदम् ।
वेदान्तवासितस्वान्तं रामानुजमुनिं भजे ॥

[2] भुक्त्यै श्रीसूक्त्यभिज्ञानां परकालाभिधं दृढम् ।
दृषद्भिर्मण्डपं चक्रे वानाद्रिमुनिनायकः ॥

சக்ரே வாநாத்ரிமுநிநாயக:॥" என்கிறபடியே காலக்ஷேப பரர்கள் எழுந்தருளியிருந்து ததீயாராதன காலத்தில் அமுது செயதருளும்படி முதல் திரையாய பரகாலவிலாஸமென்கிற பெயரையுடையதான ஒரு திருமணடபத்தைச் சிலைகளாலே த்ருடமாயிருக்கும்படி கட்டியருளினார். பின்னும் [1]"அபூப பாயஸாதீநாம் பாகம் கர்த்தும் மஹாநஸம்| அகரோத்ப்ரஸ் தரேணெளை லக்ஷ்மீநாராயணபரபோ॥" என்கிறபடியே அரங்கநகரப்பனுக்கு திருப்பணியார மடைப்பள்ளியும் தருட்மான கற்களாலே கட்டியருளினார். மேலும் சேற்றுத் தாமரை மேல்கரையிலிருக்கிற திருவரசைச் சுற்றி திருமதிள் களை ஆவரணமாகக் கட்டியருளி அதன் மத்தியிலே தெய்வ நாயகன் திருவடிகளாலே அஞ்சிதமாம்படி ஒரு திருமண்ட பத்தையும் கட்டியருளினார். பின்னும் தெய்வநாயகப் பெரு மாள் நாய்ச்சிமார்களுடன் நித்யமாய் எழுந்தருளியிருக்கும் படி ஸுவர்ணமயமாய ஒரு ஸிம்ஹாஸநம் செய்தருளினார். அநந்தரம் உத்ஸவ காலங்களிலே புறப்பட்டு எழுந்தருளு கைக்கு உபயுக்தமாம்படி ஒரு திருச்சிவிகை ஸுவர்ணமய மாய் பரகாசமானமாய்ச் செய்தருளினார் மேலும் [2]"ஹேமாத்ரி சிகராகாரம் ரதனைர் மரகதாதிபி | சக்ரே கிரீடம் யோகீந்த்ரோ விவிதாபரணாநிச॥" என்கிறபடியே தெய்வ நாயகனுக்கு மரகதம் முதலான நாநாரத்நங்களாலே அலங்க் ருதமான கிரீடம் பண்ணி ஸமர்ப்பித்தருளி தெய்வநாயக னுகககு உத்தமஸுவர்ணத்தாலே ஒரு திருப்பல்லாக்கும் அழ கியதாய்ச் செய்தருளினா.

---

[1] अपूपपायसादीनां पाकं कर्तुं महानसम् ।
अकरो त्प्रस्तरेणासौ लक्ष्मीनारायणप्रभोः ॥

[2] हेमाद्रि शिखराकारं रत्नै र्मरकतादिभिः ।
चक्रे किरीटं योगीन्द्रो विविधाभरणानिच ॥

அநந்தரம் [1]"விமாநத்வய மேதேந சயாநாஸீநபூர் ணயோ:| ஸ்ரீகுருங்கே ததா சக்ரே ஸ்ரீமத்வாநாத்ரி-யோகி ராட்||" என்று திருக்குறுங்குடியில் கிடந்தநம்பி இருந்த நம்பிகளுக்கு இரண்டு விமானங்களையும் சுத்தஸுவர்ணத் தாலே அலங்கரிப்பித்தருளி நின்றநம்பியின் திருமேனிக்கு ஒத்தபடி ஸுவர்ணத்தாலே கவசம் பண்ணிச் சாத்தியருளி உத்தமஸுவர்ணத்தால் கிரீடமும் பண்ணி ஸமர்ப்பித்து திருக்கைகளில் திருவாழி திருச்சங்குகளுக்கும் ஸுவர்ண கவசம் பண்ணிச் சாத்தியருளினர். இப்படி அனேக கைங்கர்யங்களைச் செயதுகொண்டு தெய்வநாயகமுநியாலே போல பெரியபெருமாள் தெய்வநாயகன் இருவராலும் ஸம்ஸ்தாநத்துக்கு உரியர் என்று க்ருபைசெயயப்பட்டவராய ஆழ்வார் கடாக்ஷத்திற்குப் பூர்ணபாத்ரராய நிதயததீயாராதனஙகளையும் சிஷ்யாபிவ்ருத்திகளையும் செய்துகொண்டு மஹாஸாத்விகச்ரேஷ்டராய பூருவர் அநுஷடாநங்களை ஒன்று தப்பாதே அநுஷடித்துக்கொண்டு திருமாலினுருவமெனச் சிறப்புடையராய ஸதா காலக்ஷேபபரராய இருபத்தைந்து ஸம்வத்ஸரம் தர்சனத்தை வாழ்வித்தருளினர்.

இவர் தீர்த்த திவஸமிருக்குமபடி எஙஙனே எனனில்

[2]"ஸம்ப்ராப்தே மேஷமாஸே சடஜிதமலதருக் கோசரோங்யை ரத்ருஷ்டாநர்த்தாந் த்ரய்யநதகூடாந் பரம கருணயா ஸம்ஸ்ச்ரிதேப்ய ப்ரதாய| பஞ்சம்யாம் க்ருஷ்ண

---

[1] विमानद्वय मेतेन शयानासीन पूर्णयोः ।
श्रीकुरुङ्के तदाचक्रे श्रीमद्वानाद्रि-योगिराट् ।

[2] संप्राप्ते मेषमासे शठजिदमलदृग्गोचारो ऽन्यैरदृष्टान
र्थांस्त्रय्यन्तगूढा न्परमकरुणया संश्रितेभ्यः प्रदाय ।
पञ्चम्यां कृष्णपक्षे गगनगिरिमुनि र्बुधवारे जलर्क्षे
प्राप्तेऽस्मिन्नीश्वराब्दे परमपद मगाद्वेङ्कटाख्यो मुनीन्द्रः ।

'பக்ஷே ககநகிரிமுநிர் ப்ரத்நவாரே ஜலர்க்ஷே ப்ராப்தேஸ்மிந் நீச்வராப்தே பரமபத மகாத் வெங்கடாக்யோ முநீந்த்ர !

**ஜீயர் திருவடிகளே சரணம**

**அநந்தரம் பதின்மூன்றுவது சின்ன தெய்வநாயக ஸ்வாமி.—**

இவர் ஸம்ஸ்தானத்திற்கு எழுந்தருளிய க்ரமம்[1] "ஸ்ரீசைலே சாக்யயோகீ விபுதபதிமுநிம் கூர்மஸிம்ஹாஸநேஸ்மிந்நா ரோப்ய ஸ்வாங்க்ரிபத்ம ப்ரமரபதி மஸௌ நிர்ப்பரோ பூத் ப்ரஹ்ருஷ்ட " என்கிறபடியே சின்னத் திருவேங்கட ஸ்வாமி தம்முடைய திருவடிகளிலந்தரங்கரான இந்த சின்ன தெய்வநாயக ஸ்வாமியை ஸம்ஸ்தானத்தில் அபி ஷிக்தராக்கி ப்ரஹ்ருஷ்டரானூர்.

**இவர் திருநக்ஷத்ரத் தனியன் :—**[2]"பவாக்யே வத்ஸரே மாஸி கர்க்கடே க்ருத்திகாபவம்|குணாப்திம் தேவநாதாக்ய வியத்சைலமுநிம் பஜே|| கடகே க்ருத்திகாஜாதம் தேவநாதா பிதம் குரும்| கலயே ஸ்ரீவாநசைல-யோகிராஜம் குணார் ணவம் ||

**இவர வைபவத் தனியன் —**[3]ஸ்ரீமத்வ்யோம மஹாசைல யதிராட் பதஸம் ச்ரயம்| ச்ருதச்ருத்யநதயுகளம் வந்தே ராமானுஜம் முநிம்||

---

[1] श्रीशैलेशाख्ययोगी विबुधपतिमुनिं कूर्मसिंहासने ऽस्मि-
न्नारोप्य स्वाङ्घ्रिपद्मभ्रमरपतिमसौ निर्भरोभू त्प्रहृष्टः ।

[2] भवाख्ये वत्सरे मासि कर्कटे कृत्तिकाभवम् ।
गुणाब्धिं देवनाथाख्य-वियच्छैलमुनिं भजे ॥
कटके कृत्तिकाजातं देवनाथाभिधं गुरुम् ।
कलये श्रीवानशैल योगिराजं गुणार्णवम् ॥

[3] श्रीमद्व्योम महाशैल यतिराट् पदसंश्रयम् ।
श्रुत श्रुत्यन्तयुगळं वन्दे रामानुज म्मुनिम् ॥

**வாழித் திருநாமம் —**

திகழ்கின்ற செங்கமலச் சேவடியோன் வாழியே
தெய்வநாயகமுனியைச் சிந்தைசெயவோன் வாழியே
மகிழ்மாறன் மறைப்பொருளை வளர்த்திடுவோன வாழியே
வாழ் திருவேங்கடமுனிவன் மலரடியோன் வாழியே
புகழ்கின்ற பாடியநூல் பகர்ந்திடுவோன் வாழியே
பூதூரன் மலர்ப்பதத்தைப் புகழுமவன் வாழியே
இகழ்வினறி எண்டிசையும் இறைஞ்சுமவன் வாழியே
எழில் தெயவநாயகனுர் இருநிலத்தில் வாழியே.

வாழி முனிதெயவ நாயகன்றன் மாமலர்த்தாள்
வாழியவன் முக்கோல் முகிழுமுறுவல—வாழியே
துன்னுபுகழ் வேங்கடவன் தொலலருளால் மாறன்தன்
பன்னுதமி ழீடுரைக்குஞ் சீர்,

**இவர் செயதருளிய கைங்கரய வைபவங்கள்** —"ததீயாராதநம் குர்வந வேதாந்தத்வயபாரக | காலக்ஷேபம்ததோதிஸ்ம ஸர்வவேதார்த்த-தத்வவித்||" என்கிறபடியே இவர் நித்ய ததியாராதன நிரதராய் உபயவேதாந்தார்த்தங்கள் கை புகுந்தவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுடன் ஸதாகாலக்ஷேபபரராய் பூர்வர்களுடைய வசநாநுஷ்டானங்களைத் தன் உக்த்யநுஷ்டானங்களாலே ப்ரகாசிப்பித்துக் கொண்டு எழுந்தருளியிருக்கும் காலத்திலே [1]"நிக்ஷிப்தம தநமாதாய க்ருத்வா ஸ்வாணமயீம் ததா| ஸ்ரீவக்ஷஸ்தல லக்ஷ்மீம்ச தேவேசாய ஸமார்ப்பயத்" என்கிறபடியே தெயவநாயகப் பெருமாளுக்கு திருமார்பில சாத்திக கொள்ளும்படி ஸுவர்ணத்தாலே லக்ஷ்மீபதக்கம் பணணி சாத்தியருளினுர். அநந்தரம் ஆழ்வார் மங்களாசாஸநார்த்தமாக திருநகரிக்கு எழுந்

---

निक्षिप्तं धनमादाय कृत्वा स्वर्णमयीं तदा ।
श्रीवक्षस्तललक्ष्मीं च देवेशाय समार्पयत ॥

தருளி [1]"மங்களாசாஸநம குர்வந ஸ்ரீமத்காரிஜயோகிந |
பூர்ணஸ்ய லோகநாதஸ்ய லக்ஷ்மீமார்ப்பய தாதராத்||" என்கிறபடியே ஆழ்வார் மங்களாசாஸநம் செய்தருளி பொலிந்துநின்றபிரானுக்குத் திருமார்பில் லக்ஷ்மீப்பதக்கம் ஸுவர்ணத்தாலே சாததியருளினார், அநந்தரம் [2]"குருங்கேசஸ்ய பூரணஸ்ய க்ருதவா ருக்மமயீமபி ஸ்ரீவக்ஷஸ்தலலக்ஷ்மீம்ச ஸாதரந்த்வஸமர்பபயத||" என்கிறபடியே திருக்குறுஙகுடி நம்பிக்கும் ஸுவர்ணத்தாலே திருமார்பில் லக்ஷ்மீபதக்கம் சாத்தியருளினார். இப்படிக் கைங்கர்யம் செயது கொணடு மூன்று ஸம்வத்ஸரம் ஸம்ஸ்தானத்தைப் பரிபாலித்தருளினா

இவா சரம ச்லோகம —[3] 'ஸ்ரீமாந்வயோமாத்ரி யோகீ ஸவிதரிச துலாம் ஸாதரம் ஸேவமாநே நக்ஷத்ரேஸோம தேவே ஸகலஜநஸுஹ்ருச் சந்த்ரவாரே மஹீயாந்||
க்ருஷ்ணே பக்ஷே சதுர்த்யா மதிநிபுணமதிர் பாஷ்யமுக்ய ப்ரபந்தே ப்ராப்தேஸ்மிந விக்ரமாபதே பரமபதமகாத் தேவநாதோ முநீந்த்ர ||"

ஜீயா திருவடிகளே சரணம

அநந்தரம பதினைகாவது கூரததாழவான் ஸவாமி —

இவா ஸ்தாநத்தில் அபிஷிக்தரான க்ரமம் பின்வரு

---

[1] मङ्गळाशासनं कुर्वं न्श्रीमत्कारिजयोगिनः ।
पूर्णस्य लोकनाथस्य लक्ष्मी मार्पय दादरात् ॥

[2] कुरुङ्केशस्य पूर्णस्य कृत्वा रुक्ममयीमपि ।
श्रीवक्षस्थललक्ष्मींच सादरन्त्वसमर्पयत् ॥

[3] श्रीमान्व्योमाद्रियोगी सवितरिच तुलां सादरं
सेवमाने नक्षत्रे सोमदेवे सकलजनसुहृ चन्द्रवारे महीयान् ।
कृष्णे पक्षे चतुर्थ्यां मतिनिपुणमतिर्भाष्य मुख्यप्रबन्धे
प्राप्ते ऽस्मिन्विक्रमाब्दे परमपद मगा द्देवनाथो मुनीन्द्रः ॥

மாறு—[1]"ஸது கூரேச யோகீந்த்ரம் ஸ்தாநரத்நே நிவேச்யச|" என்கிறபடியே சின்னத் திருவேங்கடஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து சின்ன தெய்வநாயக ஸ்வாமி திருவடிகளில் அந்தரங்கராயிருந்த இவரை சின்ன தெய்வநாயக ஸ்வாமி ஸ்வஸ்தாநத்தில் அபிஷிக்தராக்கியருளினார்.

இவர் திருநக்ஷத்ரத் தனியன் —[2]'ச்ராவணே மாஸி பரணீஸம்பவம் ஜயவத்ஸரே| வியத்கிரிமுநிம் வந்தே ஸ்ரீவத்ஸாங்கம் குணாம்புதிம்|| ஸிம்ஹே பரண்யா முத்பூதம் ஸ்ரீவத்ஸாங்க ஸமாஹவயம்| ககநாசலயோகீந்த்ரம் குணார்ணவ மஹம்பஜே''||

வைபவத் தனியன் ;—[3]'' ஸ்ரீமத்வயோமாத்ரி யோகீந்த்ர பாதபத்ம மதுவ்ரதம்| வேதாந்தயுகநிஷ்ணாதம் ராமானுஜ முநிம் பஜே''||

**வாழித திருநாமம்**

பூவலர்தென் பொழிலமங்கைபோற்றவந்தோன் வாழியே
புகழ்திருவேங்கட முனிதாள புகழ்ந்துயந்தோன் வாழியே
பாவலரும் பாடியத்தைப பரிந்துரைததோன் வாழியே
பராங்குசனார் சொற்பொருளைப் பகருமவன் வாழியே
தேவனெனப் பகரவந்த தேசிகனார் வாழியே
தெய்வநாயகமுனியைச் சிந்தைசெயவோன் வாழியே

---

[1] सतु कूरेशयोगीन्द्रं स्थानरत्ने निवेश्यच ।

[2] श्रावणे मासि भरणीसम्भवं जयवत्सरे ।
वियद्गिरिमुनिं वन्दे श्रीवत्साङ्कं गुणाम्बुधिम् ॥
सिंहे भरण्यामुद्भूतं श्रीवत्साङ्क समाह्वयः ।
गगनाचलयोगीन्द्रं गुणार्णव महंभजे ॥

[3] श्रीमद्व्योमाद्रि योगीन्द्रपाद पद्म मधुव्रतम् ।
वेदान्तद्वयनिष्णातं रामानुजमुनिं भजे ॥

மூவுலகும் போற்றிடமுக் கோல்தரித்தான் வாழியே
முனிகூரத் தாழ்வான்தன் மொய்கழல்கள வாழியே.

வாழியவே கூரேச மாமுனிவன் செவ்வடிகள்
வாழி அவனுரைக்கும் வாய்மொழிகள்—வாழியே
எந்தை திருவேங் கடனருளால் மாறன்தன்
செநதமிழி னீடுரைக்குஞ் சீர்.

இவா செயதருளிய கைஙகாய வைபவங்கள —[1] 'ஹிரண்மயம் ககேசாக்யம் வாஹநம் ப்ரதமெள ததா| தேவநாதாய தீர்த்தேச பங்கதாமரஸாபிதே|| மதயே யதீந்த்ர ஸரஸ. சிலாபிர் பஹுபிஸ் ததா||ஸோபாந மகரோத் ஹ்ருஷ்ட: சதுரச்ரதயா சுபம்"|| என்கிறபடியே உத்ஸவங்களில் தெய்வ நாயகனேறி உலாவியருளும்படி அழகிய லக்ஷணத்தோடு பெரிய திருவடியை வாஹநமாய ஸுவர்ணத்தாலே செய்து ப்ரதிஷ்டிப்பிததருளினுர் அநநதரம் சேற்றுத்தாமரையில் ஜீயர் தீர்ததத்திற்குச் சுற்றிலும் நிரந்தரமாயப் படிக் கட்டுகள திருடமாகக் கட்டியருளினுர். அநநதரம் பதேபதே (அடிக்கடி) திருநகரிக்கு ஆழவார் மங்களாசாஸநார்த்த மாக எழுந்தருளி உதஸவங்களில் ததீயாராதநங்களை விம ரிசையாக நடத்தியருளி ஸ்ரீவைஷ்ணவர்களாலே கொண டாடப்பட்டவராய நிதய ததீயாராதனங்களையும் சிஷ்யாபி விருத்திகளையும் செயதுகொண்டு ஸதா காலக்ஷேபபரராய் முன்னோ மொழிந்த முறை தப்பாமல தர்சனத்தை வாழ் வித்துககொண்டு பன்னிரண்டு ஸம்வத்ஸரம் வாழ்ந் தருளினுர்

---

[1] हिरण्मयं खगेशाख्यं वाहनं प्रददौ तदा ।
देवनाथाय, तीर्थेच पङ्कतामरसाभिधे ।"
मध्ये यतीन्द्रसरस श्शिलाभि र्बहुभि स्तदा ।
सोपानमकरोद्धृष्ट श्चतुरश्रतया शुभम् ॥

**இவர் சரம ச்லோகம்**

[1]"அப்தே நந்தநாமகே ரவிதிநே புஷ்யே ச தாரே சுபே சைத்ரே மாஸி வளாக்ஷ பக்ஷ ஸஹிதே புண்யே நவம்யாம் திதௌ| ஸ்ரீமாந் நைகமயுக்ம தத்வநிபுணோ வாநாத்ரியோகீ யயௌ ஸ்ரீதேவோத்தம யோகி-பாதயுகளம் ஸ்ரீ வத்ஸசிஹ்நாபித:||"

ஜீயர் திருவடிகளே சரணம

அநந்தரம் பதினைந்தாவது ஸ்ரீவத்ஸசிஹ்நஸ்வாமி —

[2]"ஸ்ரீவத்ஸசிஹ்ந யோகீந்த்ரம் ஸ்வஸ்தாநே விநிவேச்யச" என்கிறபடியே கூரத்தாழ்வானஸ்வாமியாலே இவர் ஸம்ஸ்தானத்தில் அபிஷிக்தராய் எழுந்தருளி யிருந் தார்.

இவர் திருநக்ஷத்ரத் தனியன — [3]"துர்முக்யப்தே வ்ருச்சிகாக்ய மாஸே புஷ்யர்க்ஷஸம்பவம்| சாந்தம் ஸ்ரீவத்ஸசிஹ்நாக்யம் வியத்கிரிமுநிம் பஜே|| [4]கார்த்திகே புஷ்யபே ஜாதம் சமாதிகுணஸாகரம்| ஸ்ரீவத்ஸசிஹ்ந நாமாநம் ககநாத்ரி முநிம்பஜே"||

---

[1] अब्दे नन्दननामके रविदिने पुष्येच तारे शुभे चैत्रे
मासि वळक्षपक्षसहिते पुण्ये नवम्यां तिथौ ।
श्रीमा न्नैगमयुग्म तत्वनिपुणो वानाद्रियोगी ययौ
श्रीदेवोत्तम योगिपादयुगळं श्रीवत्सचिह्नाभिधः ॥

[2] श्रीवत्सचिह्न योगीन्द्रं स्वस्थाने विनिवेश्यच ॥

[3] दुर्मुख्यब्दे वृश्चिकाख्यमासे पुष्यर्क्ष संभवम् ।
शान्तं श्रीवत्सचिह्नाख्यं वियद्गिरिमुनिं भजे ॥

[4] कार्त्तिके पुष्यभेजातं शमादिगुणसागरम् ।
श्रीवत्स चिह्ननामानं गगनाद्रिमुनिं भजे ॥

இவா வைபவத் தனியன்.—[1]"ஸ்ரீ வெங்கடேச கருணுபத ஸமஸ்தவித்யம் வாநாத்ரியோகி பதபங்கஜ ப்ருங்கராஜம்| வேதாந்தயுக்ம விசதீகரண ப்ரவீணம் ராமானுஜம் முநி வரம் சிரஸா நமாமி||"

**வாழித் திருநாமம**

பூமாதினருள் மருவப் புரிந்திடுவோன் வாழியே
புகழ்திரு வேங்கடத்தானைப் போற்றுமவன் வாழியே
மாமாது மங்கைநகர் வாழவந்தோன் வாழியே
வரமுனி கூரத்தாழ்வான் மலர்ப்பதத்தோன் வாழியே
பாமருவின் பாடியத்தைப் பரிந்துரைப்போன் வாழியே
பராங்குசனுர் சொற்பொருளைப் பரிந்தளிப்போன்வாழியே
தேமொழி சேரெட்டெழுத்தைச் செப்பவல்லோன் வாழியே
சிரீவதஸ சின்னமுனி சேவடிகள் வாழியே.

வாழியவே சீவத்ஸ சின்னமுனி மாமலர்த்தாள்
வாழியவன் பேரும் பெரும் புகழும்—வாழியே
கூரேச மாமுனிவன் கூரருளால மாறன்தொல்
சீாத்தமிழி னீடுரைகருஞ் சீர்

இவர் செயதருளிய கைங்காய வைபவங்கள் —[2]"ஸ்ரீரங் காதி மஹாக்ஷேத்ர வாயேஷு நிகிலேஷு ச| மங்களாசாஸநம் க்ருத்வா விதவத்பி ரபிபூஜித| ஸ்ரீசைலேசம் ப்ரணம்

---

[1] श्रीवेङ्कटेश करुणाप्त समस्तविद्यं
वानाद्रियोगि पदपङ्कज भृङ्गराजम् ।
वेदान्तयुग्म विशदीकरण प्रवीणं
रामानुजं मुनिवरं शिरसा नमामि ॥

[2] श्रीरङ्गादिमहाक्षेत्र वर्येषु निखिलेषु च ।
मङ्गलाशासनं कृत्वा विद्वद्भि रभिपूजितः ॥
श्रीशैलेशं प्रणम्याथ श्रीनिवासंच सादरम् ।
तस्मा द्देशादपाक्रम्य श्रीकूर्मंच जगाम सः ॥

யாத ஸ்ரீநிவாஸம்ச ஸாதரம்| தஸ்மாத் தேசாதபாக்ரம்ய ஸ்ரீ கூர்மம்ச ஜகாமஸ ||" என்கிறபடியே ஸ்ரீரங்காதி திவ்ய தேச மங்களாசாஸநார்த்தமாக யாத்திரை எழுந்தருளிப் பெரிய பெருமாளை மங்களாசாஸநம் செய்து மற்று முண்டான திவ்ய தேசங்களையும் மங்களாசாஸநம் செய்து ஆங்காங்குள்ள ஜ்ஞாதாக்களாலே ஸம்மாநிதராய்ப் புறப் பட்டுத் திருமலையேற எழுந்தருளி அப்பனை மங்களா சாஸநம் பண்ணியருளி அங்குநின்றும் வடமுகமாய் எழுந் தருளி ஸ்ரீகூர்மம் மங்களாசாஸநம் செய்தருளி அநந்தரம் [1]"ராமதீர்த்தம்ச கத்வாது வெங்கடாசார்ய ஸேவித | ராஜ் ஞாபி ஜயராமேண ப்ரஸித்தேந ஸுபூஜித | கஜாச்வை ர்விவிதை ரதனை தநேநச ததாத்ருத |" என்கிறபடியே ராமதீர்த்தத்திற்கு எழுந்தருளி அங்குள்ள மஹாஜ்ஞாதா வான வெங்கடாசார்யராலே ஸுபூஜிதராயிருக்க அத்தேசத் துக்கு ராஜாவான ஜயராமனும் இதைக்கேட்டு ஸ்வாமி ஸந்நிதியைக் கிட்டி தண்டம் ஸமர்ப்பித்து பஹு வித்தரா யிருந்து கஜாச்வங்களையும் பின்னும் அனேகம் ச்ரேஷ்டமான ரத்நாபரணங்களையும் பஹு தநங்களையும் பட்டுபீதாம்பரங் களையும் ஸ்வாமி திருவடிகளிலே பஹுப்ரீதிபுரஸ்ஸரமாக ஸமர்பபிக்க, ஸ்வாமியும் அவைகளையெல்லாம் க்ருபையாலே பெற்றுக்கொண்டு அந்த ராஜாவையும் கடாக்ஷிததருளி அவனாலே ஆத்ருதராய்ப் புறப்பட்டு வதரி சாளக்கிராமம் வைகுநதம் துவரை அயோத்தி முதலாக எல்லாவற்றையும் மங்களாசாஸநம் செயதருளி [2]"ஜகந்நாதாக்ய மோக்ஷைக

---

[1] रामतीर्थंच गत्वातु वेङ्कटाचार्यसेवितः।
राज्ञापि जयरामेण प्रसिद्धेन सुपूजितः।
गजाश्वैर्विविधै रत्नै र्धनेनच सुपूजितः॥

[2] जगन्नाथाख्यमोक्षैकक्षेत्रं गत्वा महायशाः।
तत्र श्रीवैष्णवेभ्यश्च त्रय्यन्तार्थान्प्रसाद्य सः॥

க்ஷேத்ரம் கத்வா மஹாயசா | தத்ர ஸ்ரீ வைஷ்ணவேப்யச்ச த்ரய்யந்தார்த்தாந் ப்ரஸாத்ய ஸ ||'' என்கிறபடியே ஜகந்நாதமேற எழுந்தருளி தோதாத்ரி ராமானுஜ ஸ்வாமி என்று திகந்த விச்ராந்த நாமாவாய் அங்கே சிலகால மெழுந்தருளி யிருந்து அங்கு வந்து ஆசரயித்தவர்களுக்கெல்லாம் ஹிதத்தைச் செய்தருளி அங்குள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு வேதாந்தார்த்தங்களை ப்ரஸாதித்துக்கொண்டு எழுந்தருளி யிருந்தார், அப்போது வானமாமலையில் சீவரமங்கை நாய்ச்சியார் விஷயமாய ஒரு ஸந்தேசகங்கண்டு உடனே ஜகந்நாதத்தை விட்டு விடைபெற்றுப புறப்பட்டு [1] ' தஸ்மாத் தேசாதபக்ரம்ய ஸ்ரீ வெங்கடகிரிம் புந | ஆகதய தம் ஹரிம் நத்வா ப்ரதஸ்தே தக்ஷிணாமுக ||'' என்கிறபடியே மறுபடியும் திருவேங்கடமுடையானை மங்களாசாஸநம செய்தருளிப் புறப்பட்டு, உடையவா பார்த்தஸாரதி பெரிய பெருமாள புல்லாணி எம்பெருமான், என்றிப்படியாக க்ரமேண பயண கதிகளிலே மங்களாசாஸநம் செய்தருளி வானமாமலை ஏற எழுந்தருளினார்

அநந்தரம் [2]'' ஜடிபந்தநமுக்யாநி கர்மாணி விவிதாநிச| க்ருத்வாத வரமங்காயா சாஸ்த்ரத்ருஷ்டேந கர்மணா| வித்வதப்யோ நிகிலேப்யோயம் க்ருத்வா ஸம்மாந மாதராத||'' என்கிறபடியே சிதிலமாயிருநத சீவரமங்கை ஜடிபந்தங்களை எல்லாம் புதுப்பித்து தேசதேசங்களிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களை யெல்லாம் அழைப்பித்து வெகுவிமரிசையாக ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் கொண்டருளப் பண்ணி அங்கே எழுந்தருளியிருந்த விதவான்களையெல்

---

[1] तस्माद्देशादपक्रम्य श्रीवेङ्कट गिरिं पुनः ।
आगत्य तं हरिं नत्वा प्रथस्थे दक्षिणामुखः ॥

[2] जडिबन्धन मुख्यानि कर्माणि विविधानिच ।
कृत्वाथ वरमङ्गाया श्शास्त्रदृष्टेन कर्मणा ।
विद्वद्भ्यो निखिलेभ्योयं कृत्वा सम्मान मादरात् ॥

லாம் அத்யாதரத்துடன் பஹுத்ரவ்யங்களாலே ஸம்மா நித்து அவர்களாலே பூஜிக்கபபட்டவராய எழுந்தருளி யிருநது தெயவநாயகனுக்கு கஜங்களையும் அச்வங்களையும் அநேக ரத்நாபரணங்களையும் பட்டுப் பீதாம்பரஙகளையும் ஸமர்ப்பித்தருளி அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களுடன் ஸர்வதா காலக்ஷேபபரராய பூருவாசாரியர்கள போதமநுட்டா னங்கள கூறுவாராய பஹுசிஷ்யாபிவ்ருத்தியுடன் எதிராச னினனருளுக்கிலக்காகி சதிராக தர்சநததை வாழவிததருளி பத்து ஸமவத்ஸரம ஸம்ஸ்தானத்தையும் வாழவித் தருளினா.

இவா சரம ச்லோகம் —

[1]"ஆஷாடே மாஸி பக்ஷே சுபக்ருதி தவளே பௌமவாரெ பராஹநே ஹஸ்தர்க்ஷேசாபி ஷஷ்ட்யாம் க்ஷிதிவித தயசா ஸர்வசாஸ்த்ரார்த்தவக்தா| நிக்ஷிப்ய ஸ்தாநரத்நம் ஸமுசிதவிஷயே வாநபூப்ருத் யதீநத்ர ஸ்ரீ வத்ஸாங்க: ஸுபோக்யம் சடமதநமுநே பாதபதமம் ப்ரபேதே||"

ஜீயா திருவடிகளே சரணம

அநந்தரம பதினுருவது திருநகரி திருவேஙகட ஸ்வாமி —

இவர் [2]"கதாசித் குருகாபுர்யாம் ஆலோக்யாதரதஸ் ததா| ஸ்ரீமத்வேங்கடயோகீந்த்ரம் பஹுமாந புரஸ்ஸரம்|

---

[1] आषाढे मासि पक्षे शुभकृति धवळे भौमवारे पराह्ने
हस्तर्क्षेचापि षष्ठ्यां क्षितिविततयशा स्सर्वशास्त्रार्थवक्ता ।
निक्षिप्य स्थानरत्नं समुचितविषये वानभूभृद्यतीन्द्रः
श्रीवत्साङ्क स्सुभोग्यं शठमथनमुनेः पादपद्मं प्रपेदे ॥

[2] कदाचि त्कुरुकापुर्या मालोक्यादरत स्तदा ।
श्रीमद्वेङ्कट योगीन्द्रं बहुमानपुरस्सरम् ॥
तमानीय मठे स्वस्य स्थानरत्ने निवेश्यच ।
आन्दोलिकायां संस्थाप्य गच्छन्नग्रे मुनिस्तदा ॥

தமாநீய மடே ஸ்வஸ்ய ஸ்தாநரத்நே நிவேசயச| ஆந்தோளிகாயாம் ஸம்ஸ்தாப்ய கசசநநக்ரே முநிஸ் ததா||" என்கிற படி ஆசாரயரான ஸ்ரீவத்ஸஹிநஸ்வாமி ஒருநாள் திருநகரிக்கு எழுந்தருளியிருக்கையில அங்கே திருவேங்கட ஜீயரைக் கண்டு இவருடைய ஜ்ஞான பக்தி வைராக்யாதி குணகணங்களால் மிகவுகநது அவரை ஸ்வஸ்தாநத்தில் அபிஷிக்தராக்கித் தனியே ஒரு பல்லக்கிலே அவரை வைத்து தம்முடன்கூட அழைததுக்கொணடு வானமாமலை ஏற எழுந்தருளி அவருக்குப் பெருமாள மங்களாசாஸநம் மர்யாதை முதலியன செய்வித்து ஸம்ஸ்தானத்தில் ஸ்தாபித்தருளினார். இவர் வானமாமலை சின்னத் திருவேஙகட ஸ்வாமி திருவடிகளில் ஆசரயித்தவா

இவர் திருநக்ஷதரத் தனியன் —

[1]"க்ருத்திகா ஸம்பவம் சாபே ப்ரமாதீசாக்ய வத்ஸரே| சடாரிபக்தம் வாநாத்ரி வெங்கடாக்ய முநிம் பஜே| சாபே ஸ்ரீக்ருத்திகாஜாதம ஸ்ரீ வெஙகடஸமாஹ்வயம்| சடாரி கருணா பாத்ர மம்பராத்ரி முநிம் பஜே|| "

வைபவததனியன் —

" ஸ்ரீமத் சடாரி சரணாம்புஜ ராஜ ஹம்ஸம் ஸ்ரீ வாநசைலமுநிவர்ய பதாப்ஜப்ருங்கம்| ஆம்நாயசீர்ஷ யுகபோதந ஸம்ப்ரவீணம் ராமானுஜம் யதிவரம் சிரஸா நமாமி|| "

---

1 कृत्तिकासंभवं चापे प्रमाथीचाख्यवत्सरे।
शठारिभक्तं वानाद्रि-वेङ्कटाख्यमुनिं भजे॥
चापे श्रीकृत्तिकाजातं श्रीवेङ्कटसमाह्वयः।
शठारिकरुणापात्र मम्बराद्रिमुनिं भजे॥

2 श्रीमच्छठारि चरणाम्बज राजहंसं,
श्रीवानशैलमुनिवर्यपदाब्ज भृङ्गम्।
आम्नायशीर्ष-युगबोधन संप्रवीण
रामानुजं यतिवरं शिरसा नमामि॥

**வாழித் திருநாமம் :—**

வரமங்கை நகர்வாழ வந்துதித்தோன் வாழியே
வாழ்திரு வேங்கடவன் மலரடியோன் வாழியே
மருள்கடியும் பெரியோர்கள் வாழ்த்துமவன் வாழியே
மகிழ்மாற னடியிணையை மருவுமவன் வாழியே
அருள்புரியு மெதிராச ரடிதொழுவோன் வாழியே
ஆழ்வார்கள் பதின்மர்கலை ஆய்ந்துரைப்போன் வாழியே
திருமகள்தன் சீரருளாற் சிறந்தசெல்வன் வாழியே
திருவேங்கட மாமுனிவன் திருவடிகள் வாழியே

வாழி திருவேங்கட முனிவன் பங்கயத்தாள்
வாழி குருகையெனும் மாநகரம்—வாழியே
எந்தை திருவேங்கட முனிவ னின்னருளால்
செந்தமிழை யாய்ந்துரைக்குஞ் சீர்.

**இவர் செய்தருளிய கைங்கர்ய வைபவங்கள்—**

ஸ்வாசார்யரான ஸ்ரீவத்ஸசிஹ்நஸ்வாமி சரமகைங்கர்யங்களை யெல்லாம் வெகு விமரிசையாகச் செய்தருளி பெருக்கத் திருவத்யயனமும் செய்தருளி ஸம்ஸ்தானத்தில் எழுந்தருளியிருந்து தெய்வநாயகப்பெருமாள் ஸ்ரீகார்யங்களையுமாராய்ந்து கொண்டு நித்யததீயாராதன காலக்ஷேபாதிகளையும் பஹு சிஷ்யஸம்ஸேவி தராய நடத்திப்போருகிற காலத்திலே [1] "தத கதாசித்ப்ரஸ்தாய ராமராஜாபிதோ மஹாந்|| கேரளாதிபதி ஸ்ரீமான ஸேதுஸ்நாநாப

---

[1] ततः कदाचित्प्रस्थाय रामराजाभिधो महान् ।
केरळाधिपति श्श्रीमा न्सेतुस्नानापदेशत ॥
तोताद्रिं प्राप्य राजा तु वानाचलमुनिं तथा ।
नत्वा तोताद्रिनाथं च बहुमानपुरस्सरम् ॥

3தசத | தோதாத்ரிம் ப்ராப்ய ராஜா து வாநாசலமுநிம் ததா|நத்வா தோதாத்ரி நாதம்ச பஹுமான புரஸ்ஸரம்" என்கிறபடியே கேரளாதிபனுன ராமராஜா ஸேது ஸ்நாநம் செய்து திரும்பியவன், வானமாமலை ஏறவந்து ஸ்வாமியை தண்டம் ஸமர்பபித்து தெயவநாயகனையும் ஸேவிக்க, ஸ்வாமியும் ராஜாவைப பார்த்து தெய்வநாயகனுக்கு ரத்னகசித மான கவசம் பண்ணி ஸமர்ப்பிக்கவேணுமென்று நியமிக்க ராஜாவும் அப்படியே ஸம்மதிதது ஸ்வாமி பத்மநாபனை மங்களாசாஸநம் செயய எழுநதருளவேணுமென்று ப்ரார்த்திததுக்கொணடு ஊரேறப போய்ச்சேர்நதான

ஸ்வாமியும சிலகாலம் கழிநதவாறே பத்மநாபன் மங்களா சாஸநார்த்தமாக திருவநநதபுரமேற வெழுந்தருள ராஜாவும் பஹுஸம்பரமததுடன் ஸ்வாமியை எதிர்கொணடு அழைத்து ஸ்நிதி மர்யாதைகளை யெல்லாம் வெகு விமரிசையாக நடத்திவைத்து பஹுமானிக்க, ஸ்வாமியும் பெற்றுக் கொண்டு பத்மநாபனை மங்களாசாஸநம் செயது மீளும் காலத்திலே ராஜாவும உததமமான ஜாம்பூநதமெனகிற ஸுவர்ணத்தாலே செயததாயும் ரத்னகசிதமாயும் விசித்தமாய்ச் செயதுவைத்திருநத அபேத்ய கவசத்தை தெயவநாயகனுக்குச சாததும்படி ஸமாப்பிக்க ஸ்வாமியும் பெற்றுக் கொணடு ஊரேற வெழுந்தருளி ஸகலவாத்ய வேதகோஷ ஸமந்விதராக வீதி வலம்வநது ஜ்யேஷ்டாபிஷேகம் செய்வித்து அதைத் தெய்வநாயகப் பெருமாளுக்குச சாத்தியருளினார்

அநந்தரம் [1]"ஸ்ரீவைசாகோதஸவே ப்ராப்தே சடாராதேஸ ஸிஷேவயா| ஸ்ரீநகாயபிதாநம்ஹி திவ்யதேசம் மஹாயசா || கதவா வாநாத்ரியோகீநத்ர ஸ்தாநரத்நம் ச்ரீ

[1] श्रीवैशाखोत्सवे प्राप्ते शठाराते स्सिषेवया ।
श्रीनगर्यभिधानं हि दिव्यदेशं महायशाः ॥
गत्वा वानाद्रियोगीन्द्र स्स्थानरत्नं श्रियांनिधिः ।

யாம்நிதி | ஸப்தமோத்ஸவ ஸாயாஹ்நே த்வர்ஜுநோத்யாந மாயயௌ| எனகிறபடியே ஆழ்வார் திருவைசாகோத்ஸவம் ப்ராப்தமானவாறே ஸ்வாமியும் ஸேவார்த்தமாகப் புறப்பட்டு ஏழாம் உத்ஸவம் ஸாயங்காலத்திலே அர்ஜுநோத்யாநத்தருகே எழுந்தருளினவாறே அங்கே ஆழ்வாரும் பஹுமாந புரஸ்ஸரமாய் எதிர்கொண்டு ப்ரஸாதம் முதலாக அனுப்பி அழைத்துவிட ஸ்வாமியும் மர்யாதைகளைப் பெற்றுக்கொண்டு இருவகை வாதயங்கள் விருதுகளுடன் தந்தமயமான திருப்பல்லக்கிலே எழுந்தருளி வீதிவலம்வந்து க்ரமப்படி மடமேற வெழுந்தருளி மறுநாள் காலையில் ஆழ்வார் வேத்ரபாணியை இடுவித்து அழைத்தருளி ஸம்மாநிக்க மங்களாசாஸநம் செய்தருளினார். இப்படி உதஸவ ஸமாப்தி பர்யந்தம் ஆழ்வார் ஸம்மாநிக்க திருத்தேர் ஸம்மாநத்தையும் பெற்று விடைபெற்றுக்கொண்டு வானமாமலை ஏற எழுந்தருளி தெய்வநாயகப் பெருமாள் க்ருபையாலே ஸம்மானிக்கப் பட்டவராய காலக்ஷேபபரராய் தர்சந ஸாம்ராஜ்யத்தை வளர்த்துக்கொண்டு அடிக்கடி வைசாகோத்ஸவத்திற்கெழுந்தருளி மங்களாசாஸநம் பண்ணிவருகையில் ஜீயரும் [1]“வஜ்ரவைடூர்யமாணிக்ய முக்யரத்நவிபூஷிதம்| கிரீடம் திவ்யமாச்சர்யம் கோடிஸூர்யப்ரபாந்விதம்| ப்ருஹத்வீதயாம ஸுரம்யாயாம் வாத்ய கோஷைஸ்ஸமந்வித || கஜஸ்கந்தே முநிவர ஸ்தாபயித்வா மஹாமதி | ப்ரதக்ஷிணேந கதவாஸௌ சடகோபமஹாகுரோ | அர்ப்பயாமாஸ

---

सप्तमोत्सव सायाह्ने त्वर्जुनोद्यान माययौ ॥

[1] वज्रवैडूर्यमाणिक्य मुख्य रत्नविभूषितम् ।
किरीटं दिव्यमाश्चर्यं कोटिसूर्यप्रभान्वितम् ॥
बृहद्वीथ्यां सुरम्यायां वाद्यघोषै स्समन्वितः ।
गजस्कन्धे मुनिवरः स्थापयित्वा महामतिः ॥
प्रदक्षिणेन गत्वासौ शठकोपमहागुरोः ।

தத்ரத்ய ப்ரபுணாபி ஸமாத்ருத| மங்களாசாஸநம் க்ருத்வா மடமேவஸமாகத| என்கிறபடியே ஒருஸமயம் வைசாகோத்ஸவத திருதேரிலே ஆழ்வார் எழுந்தருளியிருக்கையில ஸ்வாமியும் வஜ்ரவைடூர்ய மாணிக்ய கசிதமாய மேரு சிகரதுங்கமான ஒரு கிரீடம் பண்ணுவித்து அதை யானையிலேத்தி ஸகலவாதய கோஷத்துடன பெரிய திருவீதி வலம் வந்து திருதேரிலே எழுநதருளியிருக்கிற ஆழ்வாருக்கு ஸமர்ப்பித்து அஙகுள்ள ஸ்வாமி ஸம்பந்திகளான ஆததான திருவம்சஸ்தர்களாலே சூழநது ஸேவிக்கபபட்டவராய ஆழ்வாராலே ஸம்மாநிக்கபபடடு மஙகளாசாஸநம் செயதருளி அங்கு வநதிருநத பரபுவாலே பூஜிக்கபபட்டு யதாக்ரமமாக மடமேற வெழுநதருளினார்.

பின்பு ஒருக்கால் [1]"ஸ்ரீதநவிபுர மாஸாதய நதவா கோதாம்ச மாதரம்||" எனகிறபடியே ஸ்ரீவிலலிபுத்தூரில ஆண்டாளை மஙகளாசாஸநம் பண்ணத் திருவுளளமாய்ப புறப்பபட்டுச சென்று விலலிபுததூரருகே க்ருஷ்ணன் ஸநநிதி யேற எழுநதருள, ஆணடாளும் அடியாரகளை இடுவிதது ப்ரஸாதஙகளை ஸகல விருதுகளுடன அனுபபி எதிர் கொணடழைத்தருளி க்ரமமாக ஸம்மாநித்து க்ருபை செயதருள ஸ்வாமியும மஙகளாசாஸநம் செயதருளி ஆநநத பரிதராய அஙகுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களையும் க்ருபாகடாக்ஷததாலே ஸம்மாநித்துக் கொணடாடி மூன்று தினங்கள் ஆண்டாள மர்யாதையுடன் மங்களாசாஸநம் செயதருளி ஆணடாள் நியமனம் பெற்று வானமாமலை ஏற எழுந தருளினா.

அநநதரம் ஒருக்கால் பெரிய பெருமாள் மஙகளாசாஸநததிலே திருவுளளமாயப் புறபபட்டு அநேகம் ஸ்ரீவைஷ்ண

---

अर्पयामास तत्रत्य प्रभुणापि समादृतः ॥
मङ्गलाशासनं कृत्वा मठमेव समागतः ॥

1 श्रीधन्विपुर मासाद्य नत्वा गोदांच मातरम् ।

வர்களுடனும் ஸகல விருதுகளுடனும் பஹு ஸம்ப்ரமத் துடனும் திருப்புலலாணி எழுந்தருளி புல்லாணி எம்பெரு மானை மங்களாசாஸநம் செயதருளிப புறப்பட்டுச் சென்று ராஜமனனுரை மங்களாசாஸநம் செயதருளி மன்ன ஞா மர்யாதைகளையும் க்ரமமாய்ப பெற்றுககொண்டு அங் குளள அடியார்களாலும் பரபுக்களாலும் அநேகம் ஸ்ரீ வைஷ்ணவர்களாலும ஸம்மாநிக்கப்பட்டவராய்ப் புறப் படடு தஞ்சைமாமணிக்கோவில் முதலாக மங்களாசாஸநம் செயதருளி தஞசை மஹாராஜாவாலே ஸம்மாநிதராயப் புறப்படடு குடந்தையுட் கிடநதமாலையும் நாதன் ஸநநிதியில் நாதனையும் மங்களாசாஸநம் செய்தருளி மற்றும் சோள தேசத்திலுளள எமபெருமான்களை யெல்லாம் மங்களாசாஸ நமசெயது தில்லைநகர்த திருச்சித்திரகூடமேற எழுந்தருளி கூததாடும் கொன்றைச்சடையானுலே வநதிதராய சயனித் திருக்கும் கோவிநதராஜனையும் மங்களாசாஸநம் செய் தருளிப பின்பு சிஙகபபெருமாளகோவில் ஏற எழுந்தருளி மங்களாசாஸநம்செயது புறப்படடு "பார்த்தன் தன்தேர் முன்னுனைத திருவல்லிக்கேணிக்கணடு" மங்களாசாஸநம் செயதருளி அங்கு மூன்று மாஸ மெழுந்தருளியிருந்து அங் குள்ள ஸ்ரீவைஷணவாகளாலும் அநேகம் வைச்ய பரபுக்க ளாலும் மற்றைய ப்ரபுக்களாலும் அனபுடனும் ஆதரத்துட னும் தநங்களாலும் ரதனங்களாலும் ஸம்மாநிக்கபபட்டு அவர்களாலே ஸம்மானமாகக் கொடுக்கப்பட்ட ஆந்தோ ளிகா (பல்லக்கு) தரயததையும் பெற்றுக்கொண்டு புறப் பட்டுத் திருவேஙகடமுடையான், தேவப்பெருமாள, எம் பெருமானுர் முதலியோரை க்ரமேண மங்களாசாஸநம் செய் தருளி கோயிலேற எழுந்தருளிப் பெரிய பெருமாளையும மங் களாசாஸநம் செயதருளி அங்குள்ள படடர் முதலானோர் களாலே ஸம்மாநிதராயப் புறபபட்டு மீளவும தஞ்சை மாமணிக்கோயிலேற எழுநதருளி பரபுபூஜிதராய சம்ப காரணயம மீண்டுமெழுநதருளி மஙகளாசாஸநம் செயதருளி

மன்னனாராலே ஸம்மாநிதராயப் புறப்பட்டு வானமாமலே ஏறஎழுந்தருளினார்

அநந்தரம் ஆழ்வார்திருநகரியில் ஆழ்வாரை மங்களா சாஸநம் செய்தருளி[1] "அநத ப்ரவிச்ய யோகீந்தர க்ருத்வா ஸேவாம் சடதவிஷ| ச்வேதசசத்ரே உபேசாபி சாம ரௌசா ஸமர்பபயத்| ருக்மதண்டஸமாயுக்தௌ பீத மம்பர மேவச||" எனகிறபடியே ஆழ்வாருக்கு இரண்டு ச்வேதச்சத் ரங்களும் ஸ்வாணதண்டயுக்தமான இரண்டு சாமரங் களும பட்டுபீதாம்பரங்களும் ஸமர்ப்பித்து வெகுவிமரிசை யுடன ஸ்ரீவைஷ்ணவாகளுக்குத் ததீயாராதனங்களும் செயதருளி வானமாமலைஏற எழுந்தருளினார்

அநநதரம் வானமாமலையில்[2] "ததோ வாநாசலேசஸ்ய கைஙகர்யம் காத்துமுத்ஸுக | ஸந்நிதௌ தேவநாதஸ்ய மணடபம் க்ருதவாம்ஸ் ததா || எனகிறபடியே தெய்வநாயக கைங்காயத்திலே நிரதராய ஸநநிதி ஸமீபத்திலே உதஸ வாரததமாக ஒரு திருமணடபம் கட்டியருளி பின்பு ஆக்நே யததில பெரியதிருவடிக்கு திருவாராதநார்ததமாக சுற்றும் மதிளகட்டுவிதது உத்ஸவங்களை செயதருளியிருக்கும் காலத் திலே[3] "ஸ்வாத்மஸம்பநதிநம் ஜ்ஞாதவா ப்ராப்தம் கஞ்

---

[1] अन्तः प्रविश्य योगीन्द्रः कृत्वा सेवां शठद्विषः ।
श्वेतच्छत्रे उभेचापि चामरौ चासमर्पयत् ।
रुक्मदण्डसमायुक्तौ पीत मम्बरमेवच ॥

[2] ततो वानाचलेशस्य कैङ्कर्ये कर्तुमुत्सुकः ।
सन्निधौ देवनाथस्य मण्डपं कृतवां स्तदा ॥

[3] स्वात्मसबन्धिनं ज्ञात्वा प्राप्तं कञ्चिद्यतिं तदा ।
स्थानर.ोचितद्गति मतिरस्य व्यजायत ॥

சித் யதிம் ததா| ஸ்தாநரத்நோசிதஇதி மதிரஸ்ய வ்யஜா யத ||'' என்கிறபடியே தம்முடைய திருவடிகளில் ஸம்பந்த முடையராய ஜ்ஞாநாதிகராயிருக்கிற ஒரு ஜீயரைக் கண்டு ஸ்வாமியும் இவா தம் ஸ்தாநத்திற்கு ஆஹரென்று திரு வுள்ளம் பற்றி அவருடைய திருநாமமும் திருவேங்கடஜீயர் என்றிருக்கக் கண்டு உகந்து தம் ஸ்தாநத்தில அபிஷிக்த ராக்கி யருளினா்

அநந்தரம் தாம் புறப்பட்டு பெரியபெருமாள் ஸேவார்த் தமாக எழுநதருளி க்ரமேண திவ்யதேசங்களை யெலலாம் மங்களாசாஸநம் செய்து மீணடும் வானமாமலை ஏற எழுந் தருளி தெய்வநாயகனுக்கும் சீவாமங்கைக்கும் அநேகம் திரு வாபரணங்களைப் பண்ணி ஸமாபபித்தருளினா், இவவாறாக கைங்கர்ய சரீயுடன் பூருவர்களுடைய அநுஷடாநங்களை எலலாம் தம்முடைய அநுஷடானங்களாலே ப்ரகாசிப்பித் துக்கொணடு பஹு சிஷ்யாபிவருத்தியுடன் பத்தொன்பது ஸம்வதஸரம் எழுந்தருளியிருந்து ஸம்ஸ்தாநத்தை வாழ் வித்தருளினா,

இவா சரம ச்லோகம்—[1]துர்மதயப்தே மாஸி யுக்மே சதர்க்ஷே க்ருஷ்ணே பக்ஷே பஞ்சமீபௌமவாரே | ஸ்ரீவா நாதரி ஸ்ரீநிவாஸோ யதீந்த்ரஸ் ஸ்வாசார்யாங்க்ரி தவநத்வ மத்வந்த்வ மாகாத் ||

அநநதரம பதினேழாவது திருவேங்கடராமாநுஜஸவாமி (கோயில்):—இவர் ஸம்ஸ்தானத்திற்கு எழுநதருளிய க்ரமம் முன்னமே சொல்லப்பட்டது,

---

[1] दुर्मत्यब्दे मासि युग्मेशतर्क्षे कृष्णे पक्षे पञ्चमी भौमवारे । श्रीवानाद्रि श्रीनिवासो यतीन्द्र स्स्वाचार्याङ्घ्रि द्वन्द्व मद्वन्द्वमागात् ॥

இவர் திருநக்ஷத்ரத் தனியன் :—[1] "துலாச்ரவணஸம்பூதம் ப்ரபவே ஸத்குணர்ணவம்‖ வியதத்ரி யதீசாநம் வேங்கடாக்ய மஹம் பஜே ‖ துலாச்ரவண ஸஞ்ஜாதம் ஸ்ரீவெங்கடஸமாபிதம்| வேதசீர்ஷ யுகார்த்த ஜ்ஞம் வியதத்ரிமுநிம் ச்ரயே ‖

வைபவத் தனியன:—[2] "ஸ்ரீவாநாத்ரிமுநீந்த்ர பாதஜலஜ த்வநத்வாசரயா துல்லஸத திபக்த் யாதி குணாம்புராசி மநகம் தீநாத்ம ஸஞ்ஜீவநம்| ஸ்ரீவாக்பூஷண கூடபாவ விசதீகார ப்ரவீணம் ஸதா ஸ்ரீராமாநுஜயோகிவர்ய மதுலோதாரஸ்வபாவம் பஜே ‖

வாழித் திருநாமம :

தார்புரிந்த தாமரையாள் தாள்தொழுவோன வாழியே
 தமிழ்மறையினுட பொருளைத தந்தருள்வோன் வாழியே
மார்புதனில் புரிநூலும் மணிவடமும் வாழியே
 வளாதிருவேங கடமுனிவன் மலரடியோன் வாழியே
பார்புகழ சீபாடியத்தைப பகருமவன் வாழியே
 பற்றியவர்க்கினி தமரும் பதமருள்வோன் வாழியே
சீரபுனையும வரமஙகை சிறக்கவநதோன் வாழியே
 திருவேங்கடமாமுனிவன திருவடிகள் வாழியே.

---

[1] तुलाश्रवणसम्भूतं प्रभवे सद्गुणार्णवम् ।
वियदद्रि-यतीशानं वेङ्कटाख्य महं भजे ॥
तुलाश्रवण सञ्जातं श्रीवेङ्कटसमाभिधम् ।
वेदशीर्ष युगार्थज्ञं वियदद्रिमुनिं भजे ॥

[2] श्रीवानाद्रिमुनीन्द्र पादजलज द्वन्द्वाश्रया दुल्लस-
द्धीभक्त्यादि गुणाम्बुराशि मनघं दीनात्मसञ्जीवनम् ।
श्रीवाग्भूषणगूढभाव विशदीकार प्रवीणं सदा
श्रीरामानुज योगिराज मतुलोदारस्वभावं भजे ॥

*வாழி திருவேங் கடமுனிவன் தாளிணைகள்*
*வாழி அவனமுத வாய்மொழிகள்—வாழியே*
*எந்தை திருவேங் கடமுனிவ னின்னருளால*
*செந்தமிழி ்னீடுரைக்கும் சீர்,*

**இவர் செயதருளின கைங்கர்ய வைபவஙகள் :**

*இவா ஸமஸ்தாநததி லெழுநதருளியிருந்து தெய்வநாய கன் சீவரமங்கை திருவுளளத்திற்குப் பாங்காக ஸந்நிதி ஸ்ரீகார்யஙகளை நிர்வஹித்துக்கொண்டு ஸதா காலக்ஷேபபர ராய் ஸ்ரீவைஷணவர்களை ஆநந்திப்பித்துக்கொண்டு தர்ச னம் நிர்வஹித்துப்போரும் காலததிலே ஆழ்வாா வைசா கோத்ஸவம் ப்ராபதமாகப் புறப்பட்டருளி ஸப்தமோத்ஸவ ஸாயாஹ்நததிலே திருநகரி எழுந்தருளி யதாபூர்வம் ஆழ்வா ராலே ஸம்மாநிதராயிருக்கையில[1] "நவமேசோத்ஸவே ப்ராபதே சடாரே ஸ்யந்தநோததமே|| தசப்ரஸ்தமிதம் ஸூப சாக்கரா க்ருதஸம்யுதம்| அந்நம் நிவேதயித்வாத ஸாவேப்ய பரததௌ முநி || ஸஹி தேஷு ப்ரஸாதேஷு துர்யபாகம் முநீச்வர || க்ருஹீத்வா பரிவாரை ஸ்வை மட மேவமுதா யயௌ| என்கிறபடியே நவமோத்ஸவதினத்திலே ஆழவார் திருத்தேரில் எழுநதருளியிருக்கும் காலததிலே ஸம்ஸ்தானததில வழக்கமாக நடத்திவருகிறபடியே தசப் ரஸ்தஸம்மிதமாயும் சர்க்கராக்ருதஸம்யுதமாயும் ஸூபாந் நம் தளிகை ஸமர்ப்பித்தருளி க்ரமப்படியே ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியிலே விநியோகித்தருளி தளிகையில பரிகரப்ர ஸாதத்தையும் ஸம்ஸ்தாநமர்யாதை வழக்கப்படி பெற்றுக் கொண்டு ஆழ்வார் நியமனத்தின்பேரில மடமேற வெழுந்*

---

[1] नवमचोत्सवे प्राप्ते शठारे स्स्यन्दनोत्तमे। दशप्रस्थमितं सूप शर्कराघृतसंयुतं। अन्नं निवेदयित्वाथ सर्वेभ्यः प्रददौ मुनिः॥ सहि तेषु प्रसादेषु तुर्यभाग म्मुनीश्वरः॥ गृहीत्वा परिवारै स्स्वै र्मठमेव मुदा ययौ॥

